● For private circulation only

Book Post

www.tchsportal.co.in


# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்




● விலை : ரூ 60 திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் ● ஜீன் 2021 ● இதழ் 13






வேதநாயக சாஸ்திரியார்



ஜாண் பால்மர்



ஆபிரகாம் பண்டிதர்



V. சந்தியாகு





# இசை உலகில் கிறிஸ்தவர்களின் பங்கு..

## ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே,

ஆண்டவரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் அன்பின் வாழ்த்துக்களையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இப்படி ஒரு இக்கட்டான சூழ்நிலையை நாம் இந்த நூற்றாண்டிலே கண்டதில்லை. மரண இருளின் பள்ளத்தாக்கிலே நடப்பது போன்று ஒரு அனுபவம் தான். எனினும் கர்த்தரின் கோலும், தடியும் நம்மைத் தேற்றுகிறது என்ற உணர்வு நம்மை மெய் சிலிர்க்க வைக்கின்றது. வரலாற்றிலே நம்மிடையே பணியாற்றிய மிஷனெரிகள், நம் பகுதியில் காலரா தொற்று ஏற்பட்ட பொழுது அவர்களாற்றிய தொண்டு எத்தனை அதிகம் என்றும், எந்த ஒரு வசதியும் இல்லாத காலத்தில் எத்தனைக் கடினம் என்பதையும் நம்மை உணர வைக்கின்றது. மிஷனெரிகளை நம் மத்தியில் அனுப்பி நம்மை வாழ வைத்த கர்த்தருக்கு நன்றியினை ஏறெடுக்கின்றேன்.

கர்த்தருக்குப் புதுப்பாட்டைப் பாடுங்கள் பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தரைப் பாடுங்கள். கர்த்தரைப் பாடி, அவருடைய நாமத்தை ஸ்தோத்தரித்து, நாளுக்கு நாள் அவருடைய இரட்சிப்பை சுவிசேஷமாய் அறிவியுங்கள் என்ற சங்கீதக்காரனின் அனுபவத்திற்கேற்ப நம்மத்தியில் வாழ்ந்த ஒரு சிலர் தங்கள் பங்களிப்பை இசை வழியாக கிறிஸ்தவத்திற்கு கொடுத்திருக்கிறார்கள். அவர்களின் வாழ்வு இன்று வரலாற்று பக்கங்களில் ஆங்காங்கே ஒளிந்துக் கிடக்கின்றது. ஒளிந்து கிடக்கும் அவற்றை ஒளியினிடத்திற்குக் கொண்டு வந்த அறிந்திராதோரும் அவற்றை அறிந்துக் கொள்ளுவதற்காகவே இம்முயற்சிகளை எடுத்தோம். அநேக கட்டுரைகளைத் தொகுத்து கொடுத்துள்ளோம். நீங்கள் வாசித்து மற்றவர்களுக்கு இப்புத்தகத்தை அறிமுகம் செய்ய அன்போடு கேட்டுக் கொள்ளுகின்றேன்.

ஒவ்வொரு மாதமும் இப்புத்தகத்தை வெளியிடுவதற்கு பெருமளவில் பொருட்செலவு ஏற்படுகிறது. பத்திரிக்கை ஊழியத்திற்கு உதாரத்துவமாய் கொடுக்கும் அன்பர்களை எங்களுக்கு அறிமுகப்படுத்துங்கள். விளம்பரங்கள் கொடுக்கும் நபர்களை அறிமுகப்படுத்துங்கள்.

ஜுலை மாதத்திற்கு 'மருத்துவ துறையில் கிறிஸ்தவர்களின் பங்கு' என்ற தலைப்பில் கட்டுரைகள் அனுப்ப அன்போடு கேட்டுக் கொள்ளுகின்றேன். கட்டுரை அனுப்புகிறவர்கள் வரலாற்று பக்கங்களில் இருந்து நல்லவைகளை விட்டு சென்றிருக்கின்ற மாமனிதர்களை பற்றி எழுத அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன். வாழும் புனிதர்களைக் குறித்து பிற்காலங்களில் நம் சந்ததி தெரிந்துக் கொள்ளட்டும். ஆண்டவர் தாமே உங்கள் அனைவரையும் ஆசீர்வதிப்பாராக.

தேவகிருபை நம் அனைவரோடும் இருப்பதாக !



கிறிஸ்துவுக்குள்
**மன்னா செல்வகுமார்**

---


கிறிஸ்தவ



# வரலாற்றுச் சுவடுகள்

**பதிப்பாசிரியர்** மன்னா செல்வகுமார்

**வடிவமைப்பு** சுஜித்.S





**அலுவலக முகவரி**

கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401

**விளம்பரம் மற்றும் சந்தா விபரங்களுக்கு**


christianhistorical@gmail.com


+91 90420 15221
+91 91767 80001
+91 75388 12218


04633 290401


---



# கரில்லான்

# இசை மணி



கிறிஸ்தவ தேவாலயங்களில் இசைக்கு நிறைய முக்கியத்துவம் கொடுக்கின்றார்கள். கிறிஸ்தவ மதம் என்பது மேற்கிலிருந்து இந்தியாவிற்கு பரவிய மதமாகும். அதனால் இவர்கள் இசையில் மேற்கத்திய இசையின் தாக்கம் அதிகம் காணப்படும். அதிலும் குறிப்பாக பியானோவிற்கு மிகவும் முக்கியத்துவம் அளிக்கின்றனர். ஆலயத்தில் நடைபெறும் வழிப்பாட்டில் Organ எனப்படும். இசைக்கருவியில் தான் வாசித்தார்கள். அது பார்ப்பதற்கு பியானோவைப் போன்ற அமைப்பு காலில் காற்றை Pedel ஆல் மிதித்து கையால் விசைப்பலகையை அழுத்தி காற்றை குழாய் வழியாக செலுத்தி நாதத்தை வர வைப்பார். இதனை மேற்கத்திய இசைக் குறியீட்டிற்கு ஏற்ப வாசிப்பார்கள். பெரும்பாலும் Pipe organ-ஐ மிக பழமைவாய்ந்த தேவாலயங்களில் மட்டுமே காண இயலும். அத்தகைய இசைக்கருவிகளில் ஒன்று தான் கரில்லான் இசைமணி என்ற இந்த இசைக்கருவி ஆலய கோபுரங்களில் பல மணிகளை தொங்கவிட்டு அதில் இசையை வாசிப்பார்கள்.

இக்கருவி 18 ஆம் நூற்றாண்டில் சிறந்து விளங்கியது. ஆலய கோபுரங்களில் நிறுவினார்கள். 18ஆம் நூற்றாண்டிற்கு பின்னர் அதிகம் காணப்படவில்லை. இன்றும் கூட அண்டை நாடுகளில் ஒருசில இடத்தில் இருக்கும் தேவாலங்களில் வாசித்துக் கொண்டு தான் இருக்கின்றார்கள். நம் இந்தியாவில் அதுவும் தமிழ்நாட்டில் வாசித்துக் கொண்டு இருக்கிறார்கள்.

**மணியின் வரலாறு**

மணி என்பது நேரடியாக தாக்கப்பட்ட ஐடியா போன் தாளக்கருவியாகும். பெரும்பாலான மணிகள் ஒரு வெற்று கோப்பையின் வடிவத்தை கொண்டுள்ளன. அவை தாக்குக்போது ஒற்றை வலுவான (strike tone) அதிர்வுறும் அதன் பாகங்களும் திறமையான (resonator) ஐ உருவாக்குகின்றன. இதன் வேலைப்பாடு ஒரு சுத்தியலால் அடித்து அதன் அதிர்வால் ஒலி எழுப்புகின்றன. மணிகள் வழக்கமாக அதன் ஒத்ததிர்வு பண்புகளுக்காக பெல் உலோகத்தால் (ஒருவகை வெண்கலம்) செய்யப்படுகின்றன.



**மணிகள் பற்றிய தொல்பொருள் சான்றுகள்**



மணிகள் கி.மு.3 மில்லியத்திற்கு பழமையானவை. இது கற்கால சீனாவின் (yangshao culture) கலாச்சாரத்தில் காணப்படுகிறது மண்பாண்டங்களால் செய்யப்பட்ட கிளாப்பர்-மணிகள் பல, தொல்பொருள் காலங்களில் கண்டுபிடிக்கப்பட்டு உள்ளன. பண்டைய மண்பாண்ட மணிகள், பிற்காலத்தில் உலோக மணிகளாக வளர்ந்தன. மேற்கு ஆசியாவில் கி.மு.1000 இல் முதல் மணிகள் தோன்றின. ஆரம்பக் காலத்தில் காணப்பட்ட உலோமணிகளில் ஒன்று **தஊசி**. தாளத்திலும் நான்கு எர்லிடோ தாளத்திலும் காணப்படுகின்றன. அவை கி.மு.2000 ஆண்டு தேதியிட்டவை.



**மணி அடித்தல்** (Styles Of Ringing)

மேற்கத்திய உலகில் (Western worl) மணியின் பொதுவான வடிவம் ஒரு தேவாலய மணி (church bell) அல்லது நகராட்சி கோபுரத்தில் அமைந்த மணி (town bell) ஆகும்.



இது ஒரு கோபுரம் அல்லது கூண்டில் தொங்கவிடப்படுகிறது. இத்தகைய மணிகள் நிலையான நிலையிலோ அல்லது ஒரு கம்பி மீது பொருத்தப்படுகின்றன, இதனால் அவை முன்னும் பின்னுமாக ஆடி ஒலி எழுப்புகிறது. மணி பொதுவாக ஒலிக்க ஒரு சுத்தியலால் அடிப்பதன் மூலமாகவோ அல்லது எப்போதாவது மணிக்கு எதிராக ஒரு உள்கையிறை இழுப்பதன் மூலமாகவோ ஒலிகின்றன.

**கோவில் மணிகள்**

கிழக்கு உலகில் (Easter world) மணிகள் கோவில் மற்றும் அரண்மனைகளில் காணப்படுகிறது. மற்றும் தேவாலயங்களில் ஆராதனை ஆரம்பிப்பதற்கு முன்பு மக்கள் அறிய அடிக்கப்பட்டது. இவை அதிகமாக ரோமன் கத்தோலிக்க திருச்சபை, லுத்தரன் திருச்சபை மற்றும் ஆங்கிலிக்கன் திருச்சபைகளிடையே காணப்படுகிறது.

**செய்முறை** (Bell founding)

மணிகள் வார்பதற்க்கான செயல்முறையை 'bell founding' என்று அழைக்கப்படுகிறது. ஐரோப்பாவில் 4 மற்றும் 5 ஆம் நூற்றாண்டில் இந்த மணிகள் உருவாக்கப்பட்டன. இந்த மணிகளுக்கான பாரம்பரிய உலோகம் சுமார் 23 சதவீதம் கொண்ட வெண்கலமாகும். 'பெல் மெட்டல்' என்று அழைக்கப்படும் இந்த அலாய் துருக்கிய மற்றும் சீன சிலம்பங்களுக்கான பாரம்பரிய அலாய் ஆகும். பெரிய மணிகளில், சில நேரங்களில் பயன்படுத்தப்படும் பிற பொருட்கள் பித்தளை மற்றும் இரும்பு ஆகும். 19-ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில், இங்கிலாந்தின் பாரம்பரிய தேவாலயத்தின் மணியை உருவாக்கும்போது எஃகு பயன்படுத்தப்பட்டது. ஏனெனில் அது வெண்கலத்தை விட விலை குறைவு ஆகும்.

**வார்ப்பு முறை** (Casting)

சிறிய மணிகள் 'Lost Wax Proces' செய்முறையால் செய்யப்படுகின்றன. அதாவது மெழுகை உருக்கி அதனை மரக்கட்டையால் செய்யப்பட்ட அச்சின்மேல் வைக்கோலுடன் தடவி ஒரு சிறிய மணியை உருவாக்குகின்றனர். இது சிறிய கோவில்களில் தரிசனம் செய்யும் இடத்தில் காணலாம். பெரிய மணிகள் பெரும்பாலும் மணி அச்சுக்களில் (mold) உலோகத்தை உருக்கி, ஊற்றி செய்யப்படுகின்றன. பெரிய மணிகள் 80 சதவீதம் தாமிரம் (copper) மற்றும் 20 சதவீதம் (தகரம் அல்லது வெள்ளீயம்) (bell metal) இது வேதியியலில் 50ஐ அணு எண்ணாகக் கொண்ட தனிமமாகும் இது மிகவும் இனிமையான தொனியை கொடுக்கும் என்று அனுபவப்பூர்வமாக கண்டறியப்பட்டுள்ளது.

**கரில்லான் இசை**

கரில்லான் (US: /ˈkærəlɒn/ or UK: /kəˈrɪljən/;French: [kaʁij ]); பல மணிகள் கொண்ட ஒரு தொகுப்பு இசைக்கருவியாகும். இது பொதுவாக ஒரு தேவாலயம் (church) அல்லது நகராட்சி கட்டிடத்தின் மணிக்கூண்டில் Municipality building அமைந்திருக்கும். இந்த கருவியில் குறைந்தது 23 வார்ப்பு வெண்கலகோப்பை வடிவ மணிகள் காணப்படுகிறது. அவை முழுமையாக ஒரு இசையை வாசிக்க பயன்படுகிறது. ஒரு விசை பலகையை தாக்குவதின் மூலம் கரில்லான்களிலிருந்து இசை எழுப்பப்படுகிறது. குச்சி போன்ற விசையினை கையால் அழுத்துவதன் மூலமாகவும், மற்றும் பாதங்களில் விசையை அழுத்துவதன் மூலமாகவும் வாசித்து இசை எழுப்பப்படுகின்றன. அந்த விசைகள் இயந்திர நெம்புகோல்களையும், கம்பிகளையும் இணைக்கும் மெட்டல் க்ளாப்பர்களுடன் இணைகின்றன. அவை மணியின் உட்புறத்தைத் தாக்கும் carillonist விசையில் பயன்படுத்தப்படும் சக்தியின்படி ஒலிவேறுபாடுகளை (Tone variation) ஏற்படுத்துகின்றனர். மேலைநாடுகளில் கரில்லான்கள் திரையரங்குகளிலும் (Theaters or Studios), (The Regal cinimas London) பொருத்தப்பட்டு ஒலிப்பதிவு செய்திருக்கின்றனர்.

**கரில்லான் (Carillon) எனப்படும் இசைமணியின் வரலாறு**

முற்காலத்தில் தேவாலய சேவைகளை மக்களுக்கு அறிவிப்பதற்காக முதலில் 'ஸ்விங்கிங் மணிகள்' (Swinging Bell) பயன்படுத்தப்பட்டன. மேலும் இம்மணிகள் தீ, புயல், போர்கள் மற்றும் பிற மத சார்பற்ற நிகழ்வுகளுக்கு எச்சரிக்கை மணியாகப் பயன்படுத்தப்பட்டன. இருப்பினும் (Melodic music) மெல்லிசைக்கு வாசிக்க மணிகள் பயன்படுத்தப்பட்டது. 16ஆம் நூற்றாண்டில் தான் அதுவும் குறைந்த நாடுகளில் பயன்படுத்தப்பட்டது. முதல் கரில்லான் Flanders ல் இருந்து அங்கு 1510ஆம் ஆண்டு Odenarde Town Hall ல் கரில்லான் இசைக்கச்சேரி Batton keyboard இன் உதவியுடன் நிகழ்த்தினார். இந்த கச்சேரியின் பெயர் Concert Of Fool என்று அழைக்கப்பட்டது.' நவீன கரில்லானின் பரிணாம வளர்ச்சியில் முக்கிய நபர்கள் 17ஆம் நூற்றாண்டில் பணிபுரிந்த Peter and Francois (The Hemoney Brothers) என்பவர் ஆவார். வரலாற்றில் மிகப்பெரிய கரில்லான் மணிகளை நிறுவி பெருமையை பெற்றவர்கள் இவர்களே. 1644 ஆம் ஆண்டில் Jacob Van Eyck என்பவருடன் இணைந்து ஒரு முழுமையான இசை கருவியாக கரில்லானை உருவாக்கினர். இது zutphens Wijnhuistoren towers ல் நிறுவப்பட்டது.

**கரில்லான் இசையின் பண்புகள்** (Musical characteristics)

உலக கரில்லான் கூட்டமைப்பு (The world Carillon Federation) ஒரு கரில்லான் மணிகள் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை வரையறுக்கிறது. அழுத்தி இசைக்கப்படும் விசைப்பலகை (Batton Keyboard) மூலம் இசைக்கப்படும், ஸ்ருதி சேர்க்கப்பட்ட வெண்கல (Bronze) மணிகளால் ஆன இந்த இசைக்கருவி குறைந்தது 23 மணிகளைக் கொண்டதாக இருக்க வேண்டும்.

வட அமெரிக்காவில் Guild of Carillonneurs in Northern America என்ற அமைப்பு கரில்லான் எவ்வாறு இருக்கவேண்டும் என கீழ்கண்டவாறு வரையறுக்கிறது குறைந்தது இரண்டு ஸ்தாயிகள் (Two octave) இருத்தல் அவசியம். இது Batton Keyboard மூலம் இசைக்கப்படுகிறது. கரில்லான் மணி ஒரு வார்க்கப்பட்ட வெண்கல கோப்பை வடிவ மணி அதன் பல இசையொலி ஒன்றுக்கொன்று இணக்கமாக உள்ளது. இது வெவ்வேறு Chord களை உருவாக்கி அதில் இணக்கமாக மற்றும் ஒத்திசையாக ஒலிக்கின்றது. (Hormonoous and Concordant effect) GCNA ஒரு பாரம்பரிய கரில்லானை வரையறுக்கிறது. இது கரில்லான் மின்மயமாக்கப்படாத காலத்தில் (Non Electrified) விசைப்பலகை Batton Keyboard மூலமாக பாரம்பரியமிக்க கரில்லான் வாசிப்போரால் (carillonist) இசைக்கப்பட்டது. மணிகள் தானியங்கி இயந்திரம் (Automated mechanical or Electro mechanical) அல்லது மின் இயந்திர வழிமுறைகள் அல்லது மின்னணு விசைப்பலகை (Electrical or Electronic Keyboard) மூலமாகவும் இயக்கப்படுகின்றன. ஒவ்வொரு இசை ஸ்வரமும் ஒரு தனிப்பட்ட மணியால் தயாரிக்கப்படுவதால் ஒரு கரில்லானின் இசைவரம்பு அது கொண்டிருக்கும் மணிகளின் எண்ணிக்கை அடிப்படையில் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றன.

இரண்டு ஸ்தாயி வரம்பில் இசைக்கப்படும் கரில்லான் இசைக்கருவியில் 24 முதல் 27 வரையிலான மணிகள் காணப்படும். கச்சேரிக்கென இசைக்கப்பெறும் கரிலான்கள் நான்கு ஸ்தாயி வரம்பில் 48 மணிகளைக் கொண்டதாய் அமைந்திருக்கும். மொபைல் கரில்லான் (Travelling or Mobile carillon) எனப்படும் ஒருவகை கரில்லான் கோபுரங்களில் வைக்கப்படுகிறதில்லை.

ஆனால் அவை வேண்டிய இடத்திற்கு எடுத்துச் செல்லும் விதமாய் அமைந்திருக்கும் Frank Steijns Mobile carillon கச்சேரி அரங்கிலும், தேவாலயத்திலும், மேலும் வீட்டில்கூட வைத்து இசைக்கலாம்.

**கரில்லானிற்கான இசைக்குறிப்பு** (Carillon Music script)

கரில்லான் இசைப்பதற்கான இசைக் குறிப்பானது, இரண்டு வகையான 5 இணைக்கோட்டில் (Staves) எழுதப்படுகிறது Base Clef-இல் எழுதப்பட்ட இசைக்குறிப்பு கால்களால் வாசிக்கப்படுகிறது. Trible clef இல் எழுதப்பட்ட இசைக் குறிப்பு கைகளால் வாசிக்கப்படுகிறது.

Pedels மிக குறைந்த குறிப்பிலிருந்து (Lowest Notes) 212 octave வரை வாசிக்கப்படுகிறது Northern American Standard Keyboard களின் அனைத்து இசைக்குறிப்புகளும் கரில்லானில் வாசிக்கப்படுகிறது. கரில்லான் மணியின் தனித்தன்மையின் காரணமாக Minor Third-ன் முக்கியத்துவமான ஒலியை குறைக்காது பெரிய மணிகளைக் கொண்ட கரில்லான் பிற இசைக்கருவிகளோடு இணைந்து இசைக்கப்படும் கூட்டு இசைக்கச்சேரியில் (Instrumental Orchestration) இணைந்து இசைக்க முடியவில்லை. இதில் எழும் இசையின் முழக்கம் பிற இசைக் கருவிகளை விட அதிக ஒலியில் ஒலித்தது.



TRIBLE CLEF BASE CLEF STAVES

இதனால் பிற இசைக்கருவிகளைவிட மிக உயர்ந்த ஒலியுடன் இருப்பதால் கரில்லான் கச்சேரிக்கு உகந்ததாக இல்லாமல் இருந்தது. பின்பு 20 முதல் 25 ஆம் நூற்றாண்டு காலத்தில் கரில்லானின் மீது ஆர்வம் கொண்டோர் அதனை சிறிய கரில்லானாக மாற்றி அதை இசை கச்சேரிக்கு பயன்படுத்தினர்.

**கரில்லான் இசைப்போர்** (CARILLONNEURS)

'Carillonneurs' or 'Carillonist' என்பது கரில்லான் வாசிக்கும் இசைக்கலைஞர்களைக் குறிக்கும் சொல். இவர்கள் மணிக்கு கீழே ஒரு அறையில் அமர்ந்து ஐந்தாவது விரலான சுண்டுவிரலால் பியானோவை போன்று அமைப்பையுடைய Batton Keyboard ஐ அழுத்தி Pedal Keyboard ஐ காலால் மிதித்து அழுத்தி வாசிக்க, அதனோடு இணைக்கப்பட்ட கயிறானது மணியின் நாக்கில் கட்டப்பட்டிருக்கும் வாசிப்பதற்கு ஏற்ப இம்மணிகள் அதிர்வடைந்து





இசைக்கப்படுகிறது.

17ஆம் நூற்றாண்டில் மிகவும் பிரபலமான கரில்லான் தயாரிப்பாளர்கள் zutphen இல் உள்ள Juriaan Sprakel (இவர் 1664 Utrecht இல் உள்ள Dom கோபுரத்தில் Hemony carillon ஐ பொருத்தினார்) மற்றும் அவரது உறவினர் Willem மற்றும் Janvan call Delft இல் உள்ள Nieuwe Kerk இல் தானியங்கி சிமிங் அமைப்பை நிறுவியவர்கள். இருந்தாலும் கரில்லான் தொடர்பான எல்லாவற்றிலும் சிறந்து விளங்கியவர் Jacob van Eyck ஆவார். பின்பு 'தானியங்கி சிமிங்' அமைப்பு மூலம் கரில்லான் இயக்கப்பட்டது.

**தானியங்கி சிமிங் அமைப்பு** (Automatic Chiming System)

Voorslag என்று அழைக்கப்படும் இக்கருவி அன்றைய காலத்து மணியை குறிக்கும். Voorslag நெருக்கமான நகர மக்களின் மனதை ஈர்த்தது. இதனை Busy town folk to clock stoke என்று அழைத்தனர். முந்தைய காலங்களில், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட தானியங்கி சிமிங் மூலம் செய்யப்பட மணிகள் வெளிவர தொடங்கின. இது இன்றளவில் குறிப்பிடத்தக்க கரில்லான் பாரம்பரியம் இல்லாத நாடுகளிலும் இன்னும் செயல்பட்டு கொண்டுதான் இருக்கிறது. ஆகவே Voorslag குறைந்த நாடுகளில் காணப்பட்டன.





**ஹிமோனி சகோதரர்கள்** (The Hemoney Brothers)

The Hemoney Brothers (Francois and Peter) ஆகிய இருவரும் Loraine இல் உள்ள Lovecourte நகரில் பிறந்தவர்கள் இருவரும் மேற்கு ஐரோப்பாவை (Western Europe) சுற்றி பயணம் செய்தனர். இறுதியில் அவர்கள் மக்களை கவரும் வண்ணம் பல கரில்லான்களை உருவாக்கினர். அவற்றின் மணிகள் பழங்கால கரில்லான் மணிகளின் தரத்தைவிட மிக உயர்ந்ததாகவும் மக்களால் அங்கீகரிக்கப்பட்டதாகவும் அமைந்திருந்தது. அவர்களுக்கு உதவ Jacob van Eyck பார்வையற்றவர் முன் வந்தார். இவர் Blind Organist, Carillonneur and Composer of Utercht விஞ்ஞான அணுகுமுறையை பயன்படுத்தி அவர்கள் ஸ்ருதி சேர்க்கப்பட்ட ஒருவகையான இரும்பிலான கட்டிகளை (Tuned Bars) உருவாக்கினர். அவை Stavenspels என்றழைக்கப்படுகிறது. அதற்கு எதிராக தங்கள் மணிகளை சோதித்தனர். அவற்றின் முடிவுகள் இன்றும் சிறந்த மணிகள் தயாரிப்பவர்களுக்கு ஒரு முன்னோடியாக திகழ்கிறது.

1646 முதல் 1680 வரை இந்த திறமையான சகோதரர்கள் தனியாகவும் அல்லது ஒன்றாகவும் பணிபுரிந்து 50 கரில்லான்களை உருவாக்கினார். போர் வேளையில் மணி தயாரிப்பதை நிறுத்திவிட்டு பீரங்கிகள் மற்றும் துப்பாக்கி தயாரிக்க தொடங்கினர். இறுதியாக அம்ஸ்டெர்டம் (Amsterdam) நகராட்சியின் மணி மற்றும் துப்பாக்கி தயாரிப்பாளர்களாக நியமிக்கப்பட்டனர். இது அவர்களின் வாழ்வாதாரமாக மாறியது. அவர்கள் தங்கள் காலத்தில் தரமான மணிகளை உருவாக்கியது. மட்டுமல்லாமல் நிறைய கரில்லான் மணிகளை உருவாக்கினார். மூன்று ஸ்தாயிகள் கொண்ட மிகப் பெரிய கரில்லானையும் உருவாக்கி ஒரு முழு இசைக்கருவியாக செய்து சாதனைப் புரிந்தனர்.

**ஹெமோனி சகோதரர்கள் (பிரான்கோஸ் மற்றும் பீட்டர்)ஜோக்கப் வேன் யேக் -** கண் பார்வையற்றவர்



கி.பி.1680 ஆம் ஆண்டில் ஹீமோனி சகோதரர்கள் மரணத்திற்கு பின்பு மணி நிறுவனத்தில் கரில்லானின் ஸ்ருதி சேர்க்க யாராலும் முடியவில்லை. அவர்களுடைய கரில்லான் ஸ்ருதி சேர்க்கும் கலையை ரகசியமாக வைத்திருந்ததின் விளைவால் மணியின் தரத்தில் சரிவு ஏற்பட்டது. மற்ற நிறுவனர்களான Alexius Jullien Antoine Bernard and Jang Albert de Grave ஆகியோர் இறந்தனர். 18ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பாதியில் புகழ்பெற்ற மணி நிறுவன குடும்பத்தை சேர்ந்த Andrus Joseph van den Gheyn மட்டுமே பல நல்ல கரில்லானை உருவாக்கினார்.

### இடையன்குடி ஆலயத்தில் கரில்லான் இசை அறிமுகம்



துவக்கக் காலத்தில் ஆராதனை ஜெபத்தில் எவ்வித பாடலும் ராகமும் இல்லாதிருந்தது. இதனை அறிந்த **கால்டுவெல்** அவர்களுக்கு இசையை முறைப்படுத்திக் கொடுத்தார். ஆலயம் கட்டிக்கொண்டு இருக்கும் பொழுது கால்டுவெல் அவர்களின் சகோதரர் ஜேம்ஸ் கால்டுவெல் ஆலயத்திற்கு 5 கரில்லான் மணிகளை பரிசாக அனுப்பி வைத்தார். அதில் ஒன்று கடலில் மூழ்கி விட்டது. பின்பு மீதமுள்ள மணிகள் மற்றும் Batton Keyboard அனுப்ப தயார் பண்ணிக் கொண்டிருந்தார். அப்பொழுது இருந்த லண்டன் விக்டோரியா மகாராணி மணிகளை இந்தியாவிற்கு எடுத்துச் செல்ல அனுமதிக்க மறுத்து விட்டதால், மணிகள் மற்றும் Batton Keyboard அனுப்ப முடியாமல் போய்விட்டது. எனவே இந்த 4 மணிகளை அவர்கள் யானைகளின் உதவியுடன் கூண்டின் மீது ஏற்றி அதனை ஸ்வரம்வாரியாக கூண்டின் மீது பொருத்தினார்கள். Bat-ton Keyboard



இல்லாததால் கூண்டின் மேலே ஏறி நின்று வாசித்தனர். இதற்கு Joy bell என்று பெயரும் வைத்தனர். இன்றளவும் இந்த கரில்லான் மணிகளை இசைக்கின்றனர். தலைமுறை தலைமுறையாக வாசிக்கும் இவர்கள் முறையாக இசை பயின்றவர்கள் இல்லை என்பது வியப்பே.

### இடையன்குடி ஆலய மணியின் சிறப்பு மற்றும் தற்காலநிலை

இடையன்குடி கரில்லான் மணிகள் வெண்கலத்தால் ஆனவை. இது 18ஆம் நூற்றாண்டில் செய்தவை. இந்த மணிகளில் ஆங்கிலேயர்களின் சின்னமாகிய சிங்கம் பதித்து இருக்கும். இந்த நான்கு கரில்லான் மணிகள் 1876 ஆம் ஆண்டும், 1877 ஆம் ஆண்டும், 1879 ஆம் ஆண்டும், மற்றொன்று 1880 ஆம் ஆண்டு செய்தவையாகும். இவை Batton Keyboard இல்லாத காரணத்தினால் Tower மணிக்கூண்டின் மீது நின்று கயிறால் இழுத்து அடித்து வாசிக்கிறார்கள். இன்றளவும் இந்த கரில்லான் மணிகளை பழுதுபடாமல் இயங்கிக் கொண்டு இருக்கின்றன.



1876 1877 1879 1880

### மணி இசைக்கப்படும் நேரம் காலம்

இடையன்குடி கரில்லான் மணியை Joy Bell என்று அழைக்கின்றார்கள். இது திருமணத்தின் போது வெகு சிறப்பாக இசைப்பர். இங்குள்ள பெண்கள் கல்யாணம் செய்யும் பொழுது JoyBell வாசித்து திருமணம் முடிந்து செல்லும் பொழுது சிறப்புடன் வாழ்ந்து வருகிறார்கள். அங்குள்ள ஆண் மகன்கள் வெளியே பெண் எடுப்பதால் அவர்களுக்கு Joy Bell அதிஷ்டம் கிடைப்பதில்லை. ஒரே ஊரில் பெண் எடுத்தால் அவர்கள் அதிஷ்டசாலிகள் என்று எண்ணுகிறார்கள். அதுமட்டுமின்றி ஊரில் ஏதோ அறிவிப்பிற்காகவும் Joy Bell வாசிக்கிறார்கள். மற்றும் முக்கிய பண்டிகை புனிதர்கள் நாளன்று வெகு சிறப்பாக Joy Bell வாசிக்கிறார்கள்.

### முடிவுரை

மனிதனின் இசைக் கண்டுப்பிடிப்புகளில், ஓர் அரியக் கண்டுப்பிடிப்பு கரில்லான் என்ற மணி இசைக் கருவியாகும். உயர்ந்த தொழில் நுட்பமும், ஓங்கிய அறிவாற்றலும், அயராத உழைப்பும், ஆக்கப்பூர்வ செயலாற்றலாலும் விளைந்தது. கரில்லான் இசை மணி என்பது மிகையாகாது. இது இந்தியாவிற்கு அயல் மண்ணிலிருந்து வந்தாலும் தமிழ்நாடு இடையன்குடியில் இன்றளவும் இசைக்கப்படுவது கஞ்சக்கருவியான கரில்லானால் நமக்கு சிறப்பு என்பது திண்ணமே.

இரா. சுகிர்தராஜ் எம்.ஏ.,
இசைத்துறை கலைக்காவிரி நுண்கலைக் கல்லூரி,
திருச்சி.



# இசை உலகில் கிறிஸ்தவர்களின் பங்கு

இசை, மனிதனின் மனநிலையை வெளிக்காட்டுவதற்கு ஒரு சிறந்த வழியாக இருக்கிறது. இசையானது உலகளாவிய மனித இனத்தின் கலாச்சார அம்சங்களில் ஒன்றாகும். இசை என்பது மக்கள் வாழ்க்கை முறையில் முக்கிய பங்கு வகிக்கிறது. மனித வாழ்வின் எல்லா சூழ்நிலைகளிலும் இசை பயன்படுத்தப்படுகிறது. இசை என்ற பதத்திற்கு ஆங்கிலத்திலே 'music' என்ற பதம் பயன்படுத்தப்படுகிறது. 'music' என்ற பதம் கிரேக்க வார்த்தையான 'முசிக்கி' (LOVaiKi) என்ற சொல்லிலிருந்து வந்ததாகும். கிரேக்க புராணங்களில் ஜீயஸ் மற்றும் மினெமோசினின் தம்பதிகளுக்கு ஒன்பது மகள்கள் உண்டு. அவைகள் ஒன்பதும், ஒன்பது தெய்வங்களாக கருதப்படுவதுண்டு. இவைகளை "Muses" என்று அழைக்கப்படுகிறார்கள். இவர்கள் தான் இலக்கியம், விஞ்ஞானம், கலை, கவிதை, இசை போன்றவற்றின் மூலதனமான கடவுளாக கருதப்படுகிறார்கள். இவர்கள் மூலமாக இசை வருகிறது என்று கிரேக்கர்கள் நம்புவதினால் 'முசிக்கி' என்ற கிரேக்க வார்த்தை இசையை குறிக்க பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

**வேதாகமத்தில் சங்கீதம்**

பரிசுத்த வேதாகமத்திலும் இசை, பாடல்கள், இசைக்கருவிகள் முக்கிய இடம் பெற்றுள்ளன. யாத்திராகமம் 15ம் அதிகாரத்தில் முதல் பாடல் பதிவு செய்யப்பட்டுள்ளது. அங்கு இஸ்ரவேல் ஜனங்கள் செங்கடலைப் பிளந்து தங்களை எகிப்தியரின் கரங்களிலிருந்து விடுவித்தமைக்காக கர்த்தரை புகழ்ந்து பாடுகிறார்கள். தாவீது அரசன் இசைக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்தவனாக வேதாகமத்தில் காண்பிக்கப்பட்டுள்ளது. சுரமண்டலம் வாசிப்பதில் தேறினவனாக இருந்தது மட்டுமல்லாது, கர்த்தருடைய வழிபாட்டிலும் இசைக்கலைஞர்களை நியமித்தான் (1 நாளாகமம் 16). சங்கீத புத்தகத்தின் தொகுப்புகள் அனைத்துமே, பாடலுக்கு அக்காலத்தில் கொடுத்த முக்கியத்துவத்தைக் காண்பிக்கின்றது. வேதாகமத்தில் ஒரு பங்கு பாடலாகவே எழுதப்பட்டிருக்கிறது. புதிய ஏற்பாட்டிலும் கூட அநேக பகுதிகள் பாடலாகவோ அல்லது பாடலின் உரையாகவோ கொடுக்கப்பட்டுள்ளது. எனவே கிறிஸ்தவர்களுக்கு இறைவழிபாட்டில் பாடல் முக்கிய பங்கு வகித்ததாகவே காணப்படுகின்றது.

**கர்நாடக சங்கீதம்**

பெயரைக் கேட்டதும் தமிழ் இசைக்கும் இதற்கும் சம்பந்தம் எது என்று எண்ணத் தோன்றும். தமிழ் இசையின் மறு பெயர் தான் கர்நாடக சங்கீதம். தென் நாட்டை சேர்ந்த சங்கீதம் என்ற பொதுவான பெயரும் இதற்குண்டு. இந்தியாவில் வடக்கே முகலாயர் ஆட்சி நடைபெற்ற காலங்களில் அவர்கள் தென்னகத்தை குறிப்பதற்கு கர்நாடகம் என்றே பொதுவாக அழைத்திருக்கிறார்கள். கர்நாடக சங்கீதமானது நம் மண்ணிற்கு சொந்தமான ஒன்றாகும். பதிமூன்றாம் நூற்றாண்டின் இறுதி முதல் பதினேழாம் நூற்றாண்டின் இறுதிவரை அடங்கிய 500 ஆண்டுகாலம் தான் கர்நாடக சங்கீதத்தின் தொடக்ககாலம் என்று கூறலாம். மற்றும்மொரு சாரார் கர்நாடக இசை என்பது பழந்தமிழ் பண்ணிசையின் கூறுகளும், இங்கிருந்த நாட்டாரிசைக்கூறுகளும், வட இந்திய ஹிந்துஸ்தானி இசையின் கூறுகளும் ஆக்கபூர்வமாக கலந்து உருவான ஒரு தனித்த கலைவடிவம் என்று கூறுகிறார்கள். இந்த கர்நாடக இசையானது முழுவதுமாக இந்து கலாச்சாரத்தையே மையமாகக் கொண்டது ஆகும். எனினும் இதற்குள்ளாக மேல்நாட்டு இசைக்கருவிகளும் கனக்கச்சிதமாகப் பொறுத்தப்பட்டுள்ளதைக் காணலாம். ஆரம்பக்காலங்களில் வயலின் இசையானது கர்நாடக சங்கீதத்தில் இல்லை. பின்னர் வேதநாயகம் சாஸ்திரியார் அவர்களின் உதவியினால் தான் சேர்க்கப்பட்டிருக்கிறது என்கிறது வரலாறு. ஆங்கிலேயர் காலத்தில், கிழக்கிந்திய கம்பெனியின் இசைக்குழுவில் இடம்பெற்ற முக்கிய கருவிகளில் இத்தாலி நாட்டில் உருவான வயலினும் ஒன்று. வயலின் கருவியை அறிமுகப்படுத்தியதில் நான்கு நபர்கள் தொடர்புபடுத்திப் பேசப்படுகிறார்கள். பால தீட்ஷிதர், வரகப்பாயார், வடிவேலு பிள்ளை மற்றும் கிருஷ்ண பாகவதர். இதில் வேதநாயக சாஸ்திரியின் சமகாலத்தில் வாழ்ந்தவர் தான் வடிவேலு பிள்ளை. வடிவேலு பிள்ளை, வேதநாயக சாஸ்திரிகளிடமிருந்து வயலின் இசையினைக் கற்று அதனை கர்நாடக இசைக்கேற்ப பயன்படுத்தும் முறையை கண்டறிந்து அறிமுகப்படுத்தினார். தஞ்சாவூர் மன்னர் சரபோஜி அவர்கள் மிஷனெரிமார் மற்றும் கிழக்கிந்திய கம்பெனியோடு கூட தொடர்பின் நிமித்தமாக மேலைநாட்டு இசைக்கருவிகளாக கிளாரினட்டை கர்நாடக சங்கீதத்திற்கு அறிமுகம் செய்திருக்கின்றார்.

**வேதநாயக சாஸ்திரியார்**

வேதநாயக சாஸ்திரியார் அவர்கள் தமிழ் இசைக்கும், கிறிஸ்தவத்திற்கும் பாலம் அமைத்தவர் என்று கூறினாலும் அது மிகையாகாது. வேதநாயகம் சாஸ்திரியார் அவர்கள் 1774ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 7ம் தேதி திருநெல்வேலியில் பிறந்தார். சிறுவயதில் தாயாரை இழந்த அவரை இயேசு கிறிஸ்து கைவிடவில்லை. தன்னுடைய பத்தாம் அகவையில் இயேசு கிறிஸ்துவையும், அவரது சிலுவையினையும் காட்சியாக கண்டமாத்திரத்தில் அவர் மேல் பக்தி பரவசமடைந்து அவரையே சேவிக்கலானார். 1785ம் ஆண்டு அருள்திரு. சுவார்ட்ஸ் ஐயரவர்கள் திருநெல்வேலி வந்திருந்த போது, வேதநாயகத்தின் பக்தி வைராக்கியத்தினையும், தாலந்துகளையும் கண்டு, அவரை தன்னோடு கூட தஞ்சாவூர் அழைத்து சென்று கல்வி புகட்டலாயினார். வேதநாயகத்தின் சகமாணவனாக

தஞ்சாவூர் இளவரசரான சரபோஜி இருந்தார். சாஸ்திரியார் தரங்கம்பாடியில் அமைந்திருந்த லூத்தரன் இறையியல் கல்லூரியில் இறையியல் கற்று தேர்ந்தார். கல்வி கற்று முடிந்ததும் சிறிதுகாலம் ஆசிரியராக பணியாற்றினார். அப்பொழுதே பாடல்களை எழுதுவதில் வல்லவராக இருந்தார். தன் ஆர்வத்தினை கிறிஸ்தவ கீர்த்தனைகள் எழுதுவதிலும், இலக்கியங்கள் படைப்பதிலும் செலவிட்டார். வேதநாயக சாஸ்திரியாரின் பள்ளியின் சகமாணவனாகிய சரபோஜி தஞ்சாவூர் மன்னர் ஆனார். சரபோஜி அவர்கள் மன்னர் ஆனதும் வேதநாயக சாஸ்திரியார் அவர்களை அரண்மனையின் கவிராயராக மாற்றினார். அங்கு வேதநாயகம் சாஸ்திரியார் அவர்கள் பாடிய பாடல்கள் மிக பிரபலமாயின. அரசனைப் புகழ்ந்து பாடாமல் தன்னைப் படைத்த இறைவனையே பாடினார். வேதநாயகம் சாஸ்திரியார் அவர்களின் இசை பங்களிப்பு கிறிஸ்தவ சமூகத்திற்கு மாபெரும் பங்களிப்பாகும். சாஸ்திரியார் அவர்கள் 133 புத்தகங்களை எழுதியிருக்கிறார்கள். அவற்றுள் **'பெத்லகேம் குறவஞ்சி'** மிக சிறப்பானது. சாஸ்திரியார் எழுதின பாடல்களின் புகழ் இன்றும் மறையவில்லை. 'தந்தானை துதிப்போமே', 'ஆமென் அல்லேலூயா', 'இயேசுவையே துதிசெய்' போன்ற பாடல்கள் இன்றும் ஒவ்வொரு கிறிஸ்தவ ஆலயங்களையும், மனதையும் நிரப்பியுள்ளது.



### ஜாண் பால்மர்

வேதநாயகம் சாஸ்திரியாரின் கிறிஸ்தவ இசை பங்களிப்பிற்கு பின்பு அதிமாக போற்றப்படுபவர் திரு. ஜாண் பால்மர் ஆவார். கன்னியாகுமரி மாவட்டம், மயிலாடியில் 1812ம் வருடம் நவம்பர் மாதம் 15ம் தேதியன்று மகாராசன் வேதமாணிக்கம் என்னும் பெயர்பெற்ற குடும்பத்தில் பிறந்தார். மகாராசன் வேதமாணிக்கம் அவர்கள் குடும்பம் தான் கனம். ரிங்கல்துபே (Ringetaube) என்னும் மிஷனெரியை கன்னியாகுமரி மாவட்டத்திற்கு 1806ம் ஆண்டு அழைத்துக் கொண்டு வருவதற்கு காரணமாயிருந்தவர்கள். பள்ளிப்படிப்பை முடித்த பால்மர் அவர்கள் L.M.S. மிஷனெரி திரு. சார்லஸ் அவர்கள் நாகர்கோவிலில் ஆரம்பித்திருந்த இறையியல் கல்லூரியில் இறையியல் கற்றார்கள். மேல்கல்வியை கற்பதற்காக கொழும்பு தேசம் அனுப்பப்டார்கள். அங்கு கல்வியை கற்று முடிந்ததும் நாகர்கோவிலில் பணியாற்றி கொண்டிருந்த மிஷனெரி திரு. சார்லஸ் மால்ட் என்பவருக்கு உதவியாளராக நியமிக்கப்பட்டார்கள். அதோடு கூட லண்டன் மிஷனெரி சங்கத்திற்கு சொந்தமான அச்சகத்தில் நியமிக்கப்பட்டார்கள். பால்மர் அவர்களின் எழுத்துத் திறமைகளைக் கண்ட சார்லஸ் மால்ட் அவர்களும் மியாட் அவர்களும் பாடல் எழுதும் தாலந்தை உற்சாகப்படுத்தினார்கள். அதன் காரணமாக திரு. பால்மர் அவர்கள் அநேக பாடல்களை இனிய இசையுடன் பன்னமைத்தார்கள். பால்மர் அவர்களின் பாடல்களுள், 'பெத்தலையில் பிறந்தவரை போற்றிதுதி', 'ஓசன்னா பாடுவோம்', 'யேசுவே கிருபாசனபதியே', 'சரணம், சரணம், சரணம்' போன்றவைகள் மிக அதிகமாக இன்றும் பாடப்படுகின்றன.



### அருள்திரு. பேராசிரியர் V. சந்தியாகு.

பாரம்பரியமிக்க திருச்சபைகளில் இன்றும் பரவசத்தோடு கூட பாடப்படும் அநேக பாடல்களுக்கு சொந்தக்காரர் அருள்திரு. சந்தியாகு ஆவார். 1868ம் ஆண்டு வேதமுத்து தம்பதியினருக்கு மகனாக வத்தலக்குண்டு என்ற ஊரின் அருகே, சிலுக்குவார்பட்டி என்ற கிராமத்தில் பிறந்தார். அருள்திரு. சந்தியாகு அவர்களின் தகப்பனார் ஆரம்பக்காலங்களில் ரோமன் கத்தோலிக்க திருச்சபையைச் சார்ந்தவர். பின்னர் மிஷனெரிகளின் பணியினைக் கண்டு சீர்த்திருத்த திருச்சபையில் இணைந்தார். தென் இந்திய திருச்சபை உருவாகுவதில் பேராயர் அசரியா அவர்களோடு கூட இணைந்து செயல்பட்டார்கள். இவர் எழுதிய பாடல்களுள் மிகவும் பிரபலமானவைகளாக இன்றும் பாடப்பட்டுகொண்டிருக்கும் பாடல்களாவன, 'தாசரே இத் தரணியை அன்பாய்', 'வரவேணும் பரனாவியே', 'விந்தை கிறிஸ்தேசு ராஜா', 'தேவனே நான் உமதண்டையில்', 'தந்தேன் என்னை யேசுவே' போன்றவைகளாகும்.



### ஆபிரகாம் பண்டிதர்

ஆபிரகாம் பண்டிதர் அவர்கள் 1859ம் வருடம் ஆகஸ்டு மாதம் 2ம் தேதி அன்று திருநெல்வேலி மாவட்டம் சாம்பவர் வடகரை என்னும் கிராமத்தில், முத்துச்சாமி நாடார் அவர்களுக்கும் அன்னம்மாள் அம்மையாருக்கும் மகனாக பிறந்தார். சாம்பவர்வடகரையில் வசித்த குடும்பம், பிழைப்பிற்காக பங்களா சுரண்டை வந்தடைந்தது. அங்கே முத்துச்சாமி அவர்கள் அங்கிருந்த மிஷனெரியினிடத்தில் தோட்டக்காரராக பணியாற்றினார். தாயார் அன்னம்மாள் ஆலயப் பணிகளைச் செய்து வந்தார். சிறுவயது முதலே கல்வியில் தலை சிறந்து விளங்கி பள்ளிப்படிப்பை நிறைவு செய்து 1874ம் ஆண்டு ஆசிரியர் பயிற்சி பெற்று, ஆசிரியர் ஆனார். இளம் வயது முதலே இசையில் அளவுகடந்த ஆர்வம் கொண்டவராய் இருந்தார். அருட்திரு. யார்க் துரை என்னும் இங்கிலாந்து மிஷனெரியின் கீழ் ஆசிரியராகப் பணியாற்றினார். இசையின் மீது கொண்ட ஆர்வத்தினால் திண்டுக்கல்லில் பெரும் பெயர் பெற்று விளங்கிய சடையாண்டிப் பத்தரிடம் சென்று பிடில் வித்துவான் ஆனார். இசையின் மீது அவர் கொண்டிருந்த ஆர்வம் கண்டு அருள்திரு. யார்க் துரை அவர்கள் வயலின் ஒன்றினை ஆபிரகாம் அவர்களுக்குப் பரிசளித்தார்கள்.



ஆபிரகாம் பண்டிதர் அவர்கள் இசை உலகிற்க்கு ஆற்றிய பணிகள் கணக்கில் அடங்காதவை. 1917ம் ஆண்டு **'கருணாமிர்த சாகரம்'** என்னும் இடைநூல் வெளியிட்டு அநேக வரலாறுகளைப் பாதுகாத்துள்ளார்கள். கீர்த்தனைகளுக்கு இசையமைக்கும்

நெறிமுறைகளை ஆராய்ந்து இவ்வுலகத்திற்கு அறிமுகப்படுத்தியவர் ஆபிரகாம் பண்டிதர் அவர்களே. அநேக கீர்த்தனைகளையும் எழுதி பண்ணமைத்துள்ளார்கள். திருமண காலங்களில் மணமக்களை வாழ்த்தப் பயன்படுத்தப்படும் லாலிப் பாடல்கள், நலுங்குப் பாடல்கள் போன்றவைகளையும் எழுதியுள்ளார்கள். ஆபிரகாம் பண்டிதர் அவர்கள் எழுதிய புகழ்பெற்ற பாடல்களாவன, 'மங்களம் செழிக்க கிருபை அருளும்', 'கண்டேன் என் கண்குளிர' போன்றவைகளாகும். இசையின் மீது கொண்டிருந்த அதீத ஆர்வத்தினால், 1916ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 19, 20 ஆகிய தேதிகளில் தஞ்சையில் ஏழாவது இசை மாநாட்டினை நடத்தி வெற்றி கண்டார்கள். இசையின் மீது கொண்டிருந்த ஆர்வத்தினை பாடல் எழுதுவதிலும், பண் அமைப்பதோடும் கூட விட்டுவிடாமல் தமிழ் இலக்கியங்களில் காணப்படும் பாடல்களை ஆராய ஆரம்பித்தார். கிறிஸ்தவ சமயத்திற்கு ஏதாகிலும் நல்லவைகளை எடுத்துரைக்க வேண்டுமென விரும்பி 'நன்மறை காட்டும் நன்னெறி' என்னும் புத்தகத்தை வெளியிட்டார். விவசாயத்தில் கொண்டிருந்த விருப்பத்தால் தோட்டங்கள் அமைத்து அனைவரின் பாராட்டுகளையும், அரசாங்கத்தின் பரிசுகளையும் பெற்றார். தமிழ் கிறிஸ்தவ சமயத்தில் ஆபிரகாம் பண்டிதர் அவர்கள் இசைக்கு அளித்த பங்கு மிக பெரிது எனலாம்.

### தமிழ் இசை இயக்கம்

கர்நாடக சங்கீதம் என்றாலே அது தங்களைத் தாங்களே மேல் ஜாதி என்று கருதிக் கொள்ளுகின்ற பிராமணர்களுக்கே சொந்தம் என்ற ஒரு காலம் இருந்தது. அதனை மற்றவர்கள் முறைப்படி கற்றுக்கொள்ள முடியாதபடி இருந்த ஒரு காலம் உண்டு. 20ம் நூற்றாண்டின் மத்தியிலே 'தமிழ் இசை இயக்கம்' என்னும் இயக்கத்தின் மூலம் திராவிடர்களாக ஒன்று கூட ஆரம்பித்தார்கள். இராஜா அண்ணாமலை செட்டியார் அவர்கள் இந்த இயக்கம் வளருவதற்கு பேருதவியாக இருந்தார்கள். இந்த இயக்கத்தின் காரணமாகத்தான் தமிழகத்தில் பல இசைக்கல்லூரிகள் வந்தன. பாரம்பரிய இசைக்குடும்பத்தார் மட்டும் இசையைக் கற்றுக் கொள்ளமுடியும் என்ற நிலைமாறி பாமரரும் கற்றுக்கொள்ளலாம் என்ற நிலை வந்தது. அண்ணாமலை பல்கலைக்கழகம் அதற்கான முயற்சிகளை எடுத்து அநேக பிராமணர்கள் அல்லாதோர் தமிழ் இசையை முறைப்படி கற்றுக்கொள்ள வழிவகுத்து கொடுத்தது. இவ்வாறு பல தடைகளை தாண்டி கல்லூரி வாயிலாக இசையைக் கற்று வந்தவர் தான் கிறிஸ்தவரான திரு. T. மரியானந்தம் அவர்கள். மரியானந்தன் அவர்களின் இசை ஞானத்தைக் கண்டும், அவரது கல்வித் தகுதியைக் கொண்டும் திருச்சியில் அமைந்திருந்த ஆல் இந்திய ரேடியோ நிறுவனத்தில் பணியமர்த்தப்பட்டார். இவர் 1950ம் வருடங்களில் பல கர்நாடக சங்கீத வகுப்புகளை வானொலி மூலமாக மக்களுக்குக் கற்று கொடுத்தார்.

### இசையின் பிரிவும், வளர்ச்சியும்

பொதுவாக தமிழில் இசை என்பது நான்கு விதமாக பிரிக்கப்படுகிறது. கர்நாடக சங்கீதம். மெல்லிசை, பக்திப் பாடல்கள் மற்றும் நாட்டுப்புற பாடல்கள் என்பதுதான். மேலே கூறிய அனைத்தும் முதல் பகுதியான கர்நாடக சங்கீதம் என்னும் பிரிவில் மிக சிறப்பாக தங்கள் பங்களிப்பை கிறிஸ்தவத்திற்குக் கொடுத்தவர்கள். ஒவ்வொரு துறையிலும் கிறிஸ்தவர்கள் தங்கள் பங்களிப்பினை இசைக்குக் கொடுத்திருக்கிறார்கள் என்பது உண்மை. இன்றும் சினிமாத் துறைகளிலும் கூட பெயர் சொல்லும் அளவிற்கு கிறிஸ்தவ இசை அமைப்பாளர்கள் உண்டு. உதாரணமாக திரு. மெல்வின் சாலமோன், திரு. இம்மான், திரு. ஹரிஸ் ஜெயராஜ், திரு. ஜேம்ஸ் வசந்தன், திரு. லியோன் ஜேம்ஸ், திரு. கேபா ஜெரேமியா, திரு. பென்னி தயாள் போன்றவர்கள்.

1920 கடைசி மற்றும் 1930ம் வருடங்களின் ஆரம்பகாலங்களில் கிராமபோன் ரெக்கார்டுகள் பெருமளவில் இசைப்பிரியர்களை உற்சாகத்தில் ஆழ்த்தியது. அநேக மக்கள் இசையை விரும்பி கேட்க ஆரம்பித்தார்கள். 1927ம் ஆண்டு ஐயாத்துரை பாகவதர் அவர்கள் இயற்றி, இசை அமைத்து வெளியிட்ட 'இவரே பெருமான்' என்ற இசைத்தட்டு தான் நாம் அறிந்த மட்டில் கிறிஸ்தவ இசைத்தட்டில் பழமையானது எனலாம். காலம் செல்ல செல்ல பக்திப்பாடல்கள் கிறிஸ்தவத்தில் மலிந்துப் போக ஆரம்பித்தது. அநேகர் இந்த வரிசையிலே தங்கள் பங்களிப்பைக் கொடுக்க ஆரம்பித்தார்கள். எனினும் ஒரு சிலரே நீண்ட நாட்கள் தொடர்ந்து நிலை நிற்க முடிந்தது. 1950ம் ஆண்டுகளில் சிலோன் பெந்தேகோஸ்தே சபையின் பாடல்கள் தான் தமிழகத்தில் புதிய பாடல்கள் பிறப்பதற்கும், புதிய இசைக்கருவிகளோடு வெளிவந்ததற்கும் காரணம் எனலாம். 1950ம் வருடங்களில் அகில இந்திய வானொலியானது பிரபலமான பாடல்களை ஒலிப்பரப்புவதற்கு தடை செய்திருந்தது. அந்த நேரத்திலே சிலோன் வானொலி நிலையமானது அவர்களின் பாடல்களை மிக உன்னதமாக ஒலிபரப்பிக் கொண்டிருந்தது. அந்த பாடல்களின் தாக்கம் தமிழகத்தில் புதிய உருவில் கிறஸ்தவ பாடல்கள் மாறுவதற்கு காரணமாக அமைந்தது.

### முடிவுரை

வெள்ளையர்கள் நம் தேசத்தை விட்டு சென்று பல ஆண்டுகள் ஆனாலும், அவர்கள் விட்டுச்சென்ற பாமாலை பாடல்கள் இன்னும் நம் மனதை விட்டு செல்லவில்லை. குறிப்பாக ஆங்கிலிக்கன் திருச்சபைகள் பாமாலை பாடல்களை தங்கள் உயிராக நேசித்து, இன்றும் பாடிக்கொண்டு இருக்கிறார்கள். பாமாலைகளின் இசையும் அதின் கருத்துச் செறிவும் கேட்போரை இறைபிரசன்னத்தை உணரச் செய்கிறது என்பது மறக்க முடியாத உண்மை. எனினும் இப்பாடலகள் நம் பாரம்பரியமான பாடல்களை மறந்து போகச் செய்கிறது. மதுரை அரசரடி தமிழ்நாடு இறையியல் கல்லூரியில் நடத்தப்படும் 'இசை வழி வழிபாடு' இழந்த பாரம்பரியங்களுக்கு மறு உயிர் கொடுப்பது போன்று அமைந்துள்ளது. நாம் பயன்படுத்தும் பாடல்கள் யார் எழுதியது, எந்த சூழலில் எழுதப்பட்டது எனபதையும் அறியாது பல வேளைகளில் பாடிக்கொண்டிருக்கின்றோம். பாடல் எழுதப்பட்ட சூழலை அறிந்து அதனை பாடும்போது நிச்சயமாகவே அது இன்னும் அர்த்தமுள்ளதாக இருக்கும். இசை உலகிற்கு தமிழ் கிறிஸ்தவர்களின் பங்களிப்பு இவ்வளவுதான் என்று சொல்லி முற்றுப்புள்ளி வைக்க இயலாது. அவை பாரம்பரியமாக இன்னும் தொடர்ந்து கொண்டேதான் இருக்கின்றது.

**அருள்திரு. ஜாண் சாமுவேல் H, பண்டாரஞ்செட்டிவிளை**

# எச். ஏ. கிருஷ்ணபிள்ளை

தென்தமிழ் நாடாகிய நெல்லை சீமை மேலை நாட்டு அறிஞர் பலரைத் தமிழ்த்தொண்டராக்கிய பெருமையுடையதாகும். பிற நாட்டு அறிஞர் பலரை தமிழ்ப் பணியில் உய்த்த தென்தமிழ் நாடு, அத்தோடு நின்றுவிடாமல் தமிழை தாய்மொழியாக கொண்டவர்களையும் தமிழ் மொழி ஆராய்ச்சியில் ஈடுபடுத்தியுள்ளது - அதில் தவிக்க முடியாத ஒரு நபர் தான் கிறித்துவக் கம்பர் என்று அழைக்கப்பட்ட ஹென்றி ஆல்பிரட் கிருஷ்ணபிள்ளை என்பவர் ஆவார்.

தமிழகத்திலுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் கரையிருப்பு என்னும் சிற்றூரில் 1827ஆம் ஆண்டு ஏப்ரல் 23ஆம் நாள் சங்கர நாராயணபிள்ளை மற்றும் தெய்வநாயகி அம்மையார். என்பவர்களுக்கு மகனாக பிறந்தார். இவர் பிறப்பால் வைணவ சமயத்தை சார்ந்தவராதலால் ஆழ்ந்த தமிழ்ப் புலமையும் கல்வியறிவும் அவருக்கு கிட்டியது. தன்னுடைய சிறுவயது முதலே தமிழ் இலக்கண இலக்கிய மரபுகளில் ஆழ்ந்த ஈடுபடும் பயிற்சியும் கொண்டவராக வளர்ந்து வந்தார்.



தமது பதினாறாம் வயதில் தன்னுடைய தந்தையை இழந்ததன் விளைவாக பாளையங்கோட்டை வந்த கிருஷ்ணப்பிள்ளை, அங்கிருந்த வள்ளல் வெங்கு முதலியார், திருப்பாற்கடல்நாதாக் கவியார் போன்றோரின் உதவியுடன் தமிழ் இலக்கண இலக்கிய மரபுகளின் ஐயங்களை கேட்டு விளக்கம் பெற்றார். அத்துணை பயிற்சியுமே பின்னர் இவர் கவிஞராவதற்கு பெரிதும் உறுதுணையாக இருந்தது.

நெல்லை சீமையில் கிறித்தவ சங்கங்கள் கிளர்ந்து எழுந்து, சிறந்த சமயத் தொண்டு செய்து கொண்டிருந்த சமயம் அது. தமிழ் இலக்கியத்திலும் இலக்கணத்திலும் போதிய அறிவு பெற்று தகுதிவாய்தவராக இருந்த காரணத்தால், சாயர்புரம் திருமன்றப் பயிற்சிக் கல்லூரியின் தமிழாசிரியராக 1852ல் கால்டுவெல் ஐயரவர்களால் பணியமர்த்தப்பட்டார்.

வைணவ நெறிகள் மீது மிகுந்த பற்றுதலாயிருந்த காரணத்தால் கிறித்தவ மார்க்கத்தின் எதிர்ப்பாளராகவே இருந்தார். கிறித்தவ சங்கங்களின் சமய தொண்டிற்கு எதிராக கலகம் செய்த கிருஷ்ணபிள்ளைக்கு, சாயர்புரத்தின் பள்ளித் தலைவராயிருந்த ஹக்ஸ்டபிள் மூலமாக கிறித்தவத்தின் மீதான நம்பிக்கை துளிர்விட ஆரம்பித்தது. பின்னர் சென்னைக்கு சென்று 1858ம் ஆண்டு தனது 31ம் வயதில் திருமுழுக்குப்பெற்று கிறிஸ்தவரானார். அது முதல் அவருக்கு ஹென்றி ஆல்பிரட் கிருஷ்ணபிள்ளை என்ற பெயர் வழங்கப்பட்டது.

1876ல் பாளையங்கோட்டை சி.எம்.எஸ்.கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக பணியாற்றினார். பின்னர் 1887ல் திருவனந்தபுரம் மகாராசர் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியராகவும், கிறித்தவ இலக்கியச் சங்கத்தின் ஆசிரியராகவும் அவர் ஆற்றிய பணிகள் குறிப்பிடத்தக்கவை. கூடுதலாக, தன்னுடைய சொந்த அனுபவங்களை அடிப்படையாக கொண்டு பல பாடல்கள் பாடி வந்தார். கிருஷ்ணபிள்ளை இயற்றிய பாடல்கள் தமிழ் சீர்திருத்த திருச்சபை மத்தியில் நன்கு அறியப்பட்டு இன்றும் வழக்கத்திலுள்ளன. உதாரணமாக, கிறிஸ்தவ கீர்த்தனைகள் புத்தகத்தில் முதலாவது பாடலாக இடம் பெற்றிருக்கும் 'சத்தாய் நிஷ்கலமாய்' என்ற பாடல் இவரது படைப்பே.

கிறித்தவ மார்க்கத்திற்கு வருவதற்கு முன்னதாகவே கிருஷ்ணப்பிள்ளை, ஜான் பனியன் என்பவரின் Pilgrim's Progress என்ற புத்தகத்தை படித்துள்ளார். அதுவே அவருடைய வாழ்வில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. இந்நூல் அவருடைய சொந்த அனுபவத்தை வெளிப்படுத்துவதாக உணர்ந்ததினால் இந்நூலை அடிப்படையாக கொண்டு இரட்சணிய யாத்ரிகம் என்ற பெருங்காப்பியத்தை இயற்ற ஆரம்பித்து அதில் வெற்றி கண்டார்.

கிருஷ்ணபிள்ளை பெரும்பாலும் இலக்கியச்செறிவு மிக்க இறைக்காப்பியமாகவும் முத்தமிழ் காப்பியமாகவும் படைத்த இரட்சணிய யாத்ரிகத்தாலேயே பெரிதும் அறியப்படுகின்றார்.

இவர் இரட்சணிய யாத்திரிகம் மட்டுமன்றி வேறு பல நூல்களையும் இயற்றியுள்ளார். இறைவனைப் புகழும் இனிய தேவாரப் பாடல்கள் அடங்கிய 'இரட்சணிய மனோகரம்' என்னும் நூலையும்', 'போற்றித் திரு அகவல்', 'இரட்சணிய சரிதம்' என்னும் செய்யுள் நூல்களையும் இயற்றியுள்ளார். அவ்வாறே 'இலக்கண சூடாமணி' என்னும் இலக்கண நூல், 'பாளையங்கோட்டை எச். ஏ. கிருஷ்ணபிள்ளை கிறித்துவரான வரலாறு' என்ற தன் வரலாற்று நூல் ஆகியவற்றை உரைநடையில் படைத்துள்ளார். 'காவிய தரும சங்கிரகம்' என்ற இலக்கியத் தொகுப்பு நூலையும் உருவாக்கியுள்ளார். 'வேதப்பொருள் அம்மானை', 'பரத கண்ட புராதனம்' ஆகிய நூல்களைப் பதிப்பித்துள்ளார்.

தமிழ் இலக்கியத்திற்கு சுதேசக் கிறித்தவர்களது பணிகள் பற்றியும் கிறித்தவ இலக்கியத்திற்கு தமிழ்ப்புலமையாளர்களது பணிகள் பற்றியும் ஆய்வு மேற்கொள்வார் எவரும் கிருஷ்ணப்பிள்ளையை தவிர்த்து சிந்திக்க இயலாது.

கிருஷ்ணபிள்ளை தனது சமகால ஆளுமைகளான வேதநாயகம்பிள்ளை, மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆகியோரிடம் நட்புணர்வு கொண்டவராக விளங்கி, தமிழ் இலக்கியப்பரப்பில் அடையாளம் காணப்படும் முன்னோடி ஆளுமைகளில் ஒருவராக உள்ளார்.

தமிழுக்கும், குறிப்பாக கிறித்தவ சமய சார்பான இலக்கியங்களுக்கும் ஆற்றிய தொண்டால் 'கிறித்தவ கம்பர்' என்று அழைக்கப்படும் புகழை பெற்று சிறந்த கிறித்தவ பண்பாளராக திகழ்ந்து வந்த கிருஷ்ணபிள்ளை 1900ம் ஆண்டு பிப்ரவரி 3ம் நாள் மறுமைக்குள்ளாக பிரவேசித்தார். கிருஷ்ணபிள்ளை அவர்கள் ஆற்றிய தமிழ்பணியும், தமிழ் வழியே ஆற்றிய இசைப்பணியும் மிக சிறப்பானது.

ஜெனோ செல்வகுமார். கி அணைத்தலை

# பாட்டு பாடும் போது பக்திவிருத்தி உண்டாகனும்!

**மோதிலால் ஜோயல் (முதலூர்)**

யாருக்குத்தான் பாடல் பிடிக்காது? சிறுவயதில் இருந்தே நாம் நிறைய பாடல்களைக் கேட்கிறோம். சிறுவர்களாய் இருக்கும் போது VBS மற்றும் ஞாயிறு பள்ளியில் பல பாடல்களை உற்சாகமாய்க் கற்றுக்கொள்கிறோம். நான் சிறுவனாய் இருக்கும்போது கற்றுக்கொண்ட 'ஒரு வெண்ணங்கி ஒரு பொன்முடி, டக்கு டக்கு மோட்டார் வண்டிதான்' பாடல்கள் இன்றும் நினைவில் இருக்கின்றன. நீண்ட பிரசங்கங்கள் செய்து ஒரு ஆவிக்குரிய கருத்தை மக்களின் மனதில் பதிவு செய்ய முயல்வதை விட பாடல்கள் மூலமாக அக்காரியத்தைச் செய்வது எளிது. மேலும், நாம் கவலையாய் இருக்கும்போது தேவன் பாடல்கள் மூலமாய் நமக்கு ஆறுதலளிக்கிறார். முன்னேறிச் செல்ல பெலனளிக்கிறார். பாடல்கள் இல்லாத கிறிஸ்தவ ஆராதனையை கற்பனை செய்ய முடியாது. நமக்கு கிறிஸ்து மார்க்கத்தைக் கற்றுக்கொடுத்த மிஷனரிகள் திருச்சபை ஆராதனைகளில் 'பாடல் பாடும்' ஒழுங்கை ஏற்படுத்தினர். நாம் பல அர்த்தமுள்ள கீர்த்தனைகளையும், பாமாலைகளையும், கன்வன்ஷன் கீதங்களையும் பாடி நம் ஜீவனுள்ள தேவனை ஆராதித்து வருகிறோம்.

தமிழ் கிறிஸ்தவத்திற்கு தேவன் கொடுத்திருக்கும் ஆயிரக்கணக்கான அர்த்தமுள்ள பாடல்களுக்காக நான் தேவனை துதிக்கிறேன். பல ஆண்டுகளுக்கு முன்பிருந்தே அநேக தேவதாசர்களைப் பயன்படுத்தி பலதரப்பட்ட இசைகளில் தேவன் நமக்குப் பாடல்களைத் தந்து வருகிறார். இன்றைக்கு கிறிஸ்தவத்தில் ஒருகூட்ட மக்கள் பழைய பாடல்களையே மேன்மையாகக் கருதுகின்றனர். மற்றொரு கூட்டத்தினர் புதிய பாடல்களை மட்டுமே ஆராதனையின்போது பயன்படுத்துகின்றனர். எந்தப் பாடல்களை பயன்படுத்த வேண்டும் என்பது அவரவர் தனிப்பட்ட விருப்பம் என்றாலும் எனக்கு மனதில் தோன்றிய சில காரியங்களை வாசகர்களாகிய உங்களிடம் பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகிறேன்.

பழைய பாடல்களில் இருக்கும் உபதேச தரத்திற்காக (doctrinal quality) நான் தேவனை துதிக்கிறேன். சருவலோகாதிபா நமஸ்காரம், சீர்திரி ஏக வஸ்தே போன்ற பாடல்கள் தனக்குள்ளேயே திரித்துவ உபதேசத்தை உள்ளடக்கியதாய் இருக்கின்றன. மேலும் இரட்சிப்பு, அர்ப்பணிப்பு, ஆத்தும ஆதாயம், இயேசு கிறிஸ்துவின் இரண்டாம் வருகையைப்பற்றிய வரிகள் அதிகமாகப் பழைய பாடல்களிலேயே இடம்பெற்றிருக்கின்றன. வெறும் உலக ஆசீர்வாதங்களையே மையமாய்க் கொண்டு எழுதப்படும் இன்றைய பல பாடல்களால் என்ன பிரயோஜனம்? இன்றைய பாடல்கள் சிலவற்றைப் பார்க்கும் போது வேதத்தில் சொல்லப்பட்டிராத ஒரு கற்பனையான தேவனையும், கிறிஸ்து மார்க்கத்தைப் பற்றியும் பாடுகிறார்களோ என்று எனக்குள் கேள்வி எழுகிறது. வெறுமனே நவீன இசையும், வசீகரிக்கும் ராகமும் பக்திவிருத்தி உண்டாக்கும் பாடல்களை உருவாக்க முடியாது. வேதநாயகம் சாஸ்திரியார், எமில் ஜெபசிங், சாரா நவரோஜி போன்றோர் எழுதிய பாடல்களின் தரத்திற்கு இன்றைய பாடல்கள் வருமா என்றால் அது கேள்விக்குறியே. இன்றைய பாடலாசிரியர்கள் இவைகளைக் கருத்தில் கொண்டு பாடல் எழுதினால் அது ஒட்டுமொத்த தமிழ் கிறிஸ்து மார்க்க வளர்ச்சிக்கு ஏதுவாகும் என்பது எனது தாழ்மையான கருத்து.

அடுத்து, பழைய பாடல்களில் இருக்கும் சில 'தூய தமிழ்' வார்த்தைகளுக்கு இன்றைய தலைமுறையாகிய எங்களுக்கு அர்த்தம் புரியவில்லை. பழைய பாடல்கள் அர்த்தமுள்ளதாய் இருந்தாலும், சில 'அர்த்தம்' புரியாத வார்த்தைகளைப் புரியாமல் பாடுவதில் அதிகப் பயனில்லையே! இந்தச் சிரமத்தைக்களைய ஏதாவது செய்தாக வேண்டும். புதிய பாடல்களோ இன்றைக்கு பேச்சு வழக்கில் இருக்கும் வார்த்தைகளைக் கொண்டு இயற்றப்படுவதால் புரிந்துகொள்வதற்கு எளிதாக இருக்கிறது. பாடல்களின் இசையைப் பொருத்தமட்டில் அது கேட்பதற்கு இனிமையாக இருக்கவேண்டும். இசை (music) பாடலுக்கு உயிர் கொடுக்கிறது. (இதை நான் எழுதும்போது, பரலோகம்தான் என் வீடு என்ற பாடலில் வரும் 'தானா..னா..னா னா னா...தானா..னானா' என்ற தாளம் மனதில் ஒலிக்கிறது.) அந்தந்த மக்கள் கூட்டங்களின் கலாச்சாரத்தைப் புரிந்துகொண்டு பாடல்களுக்கு ராகம் அமைக்க வேண்டும். பொதுவாக மக்களின் ரசனை (இசை) குறிப்பிட்ட கால கட்டத்திற்குள் மாறிவிடுகிறது. இதையும் நாம் மனதில் கொள்ளவேண்டும். பழைய பாடல்கள் இன்றைய இசைக்கேற்றாற்போல் மாற்றம் (remix) செய்து பாடினால் நலமாயிருக்குமென்று நான் எண்ணுகிறேன். மக்கள் விரும்பும் இசையில் தரமான பாடல்களைக் கொடுப்பதில் எதுவும் தவறில்லையே! தயவுசெய்து பெரியவர்கள் இன்றைய இசையை அருவறுப்பாகப் பார்க்கவேண்டாம். மொத்தத்தில் பக்திவிருத்தி உண்டுபண்ணும் பாடல்கள் எழுதப்பட வேண்டும். அது எல்லோராலும் புரிந்துகொள்ளக்கூடியதாய் இருக்கவேண்டும். கால, கலாச்சார பின்னணிகேற்ற இசையும், ராகமும் அமைக்கப்பட வேண்டும். பழைய பாடல்களை விரும்புவோர் பிறரை நியாயம் தீர்க்கக்கூடாது, புதிய பாடல்களை விரும்புவோர் பிறரை அற்பமாய் எண்ணக்கூடாது. நல்ல பாடல்களைக்கேட்டு அநேகர் கிறிஸ்துவண்டை வரட்டும்! கிறிஸ்துவில் வளரட்டும்! "பறக்கட்டும் பறக்கட்டும், சிலுவையின் ஜெயக்கொடி அல்லேலூயா!" பெரியோரே கொஞ்சம் புரிந்துகொள்ளுங்கள்! வாலிபரே கொஞ்சம் சிந்தியுங்கள்!



# கிறிஸ்தவ கீர்த்தனைக் கவிஞர்கள்

சேலத்தில் வாழ்ந்து சிறந்த கீர்த்தனைக் கவிஞர்களால் சேலம் பெருமை பெற்றது. அவர்கள் தமிழ் கிறிஸ்தவர்களுக்கான பக்தி இலக்கியங்களாக பாடிய கீர்த்தனைகள் இன்றும் பயன்பட்டு வருவதோடு, கிருபாசனத்தின் மகிமைக்காக இதை பாடினவர் யாரோ என்ற தேடலையும் நமக்குத் தருவதாகவும் திகழ்கின்றன. சேலம் இவர்களின் பூர்வீக பூமியாக இல்லாமல் போனாலும், இவர்கள் வந்து பிரியமுடன் வாழ்ந்த சிறந்த பூமி மேலும் இவர்களின் படைப்புகள் இவர்களுக்கு புகழ் தேடி தந்ததும் இங்கேதான். சேலத்திற்கும் தங்கள் படைப்புகளால் பெருமை பெற்றுத் தந்தார்கள். சேலம் கிறிஸ்தவத்தின் ஆன்மீக, மற்றும் இலக்கிய செறிவிற்கு இவர்களின் பங்கும்,பணிகளும்,படைப்புகளும், இன்றும் சாட்சியாக நிற்கின்றன.

**உபதேசியார் யோவான் யாக்கோபு (1826-1885)**

இவர் கரூரில் பிறந்தவர். நடுநிலைக் கல்வியை முடித்து. ஆசிரியர் பயிற்சி, அதனைத் தொடர்ந்து இறையியல் கல்வி முடித்து உபதேசியாராக பணி செய்தவர். ஆரம்ப காலத்தில் ஆசிரியராக வேலைபார்த்து வந்த நிலையில், ஆங்கிலேய மிஷனெரிகளின் போதனைகளால் கவரப்பட்ட இவர் இறையியல் கற்று, மிஷனெரிகளின் கீழ் அவர்களுக்கு உதவியாக உபதேசியாராக பணிபுரிந்து வந்தார். கடலூரில் இவர் பணிபுரியும் போது அங்கே ஒரு பிராமண பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார். சங்கீதத்தில் நாட்டமுள்ள இவர் சௌடையர் என்பவரிடம் கர்நாடக சங்கீதத்தையும், வயலின் வாசிப்பதையும் சிறப்பாகக் கற்றுத் தேர்ந்தார். தலைசிறந்த வயலின் வித்வானாக திகழ்ந்த இவர் வயலினை தலையிலும், முதுகிலும், வைத்து வாசிப்பாராம், கரூர், கடலூர், சேலம், ஈரோடு, பவாணி, சங்ககிரி போன்ற ஊர்களில் கிறிஸ்துவின் நற்செய்தியை போதிக்கும் உபதேசியாராக ஊழியம் செய்தார். பெரும்பாலும் இவர் தான் வைத்திருந்த ஒரு பழைய சைக்கிளில் பயணம் செய்தே கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவித்துவந்தார். ஊர்களுக்குச் செல்லும் போது மாட்டுவண்டியில் பயணித்து நற்செய்தி அறிவிப்பதை வழக்கமாக கொண்டிருந்தார். பக்தி வைராக்கியமாக காலுக்கு செறுப்பு கூட அணியாமல் வெறும் காலோடு நடக்கும் வழக்கத்தைக் கைக்கொண்டு வந்தார். இவர் அநேக கீர்த்தனைகளை எழுதி, இராகம் அமைத்து அவைகளைப் பாடி கேட்பவர்களை பரவசப்படுத்துவார்.

நமது கிறிஸ்தவ கீர்த்தனைகள் புத்தகத்தில் இவர் எழுதிய ஒரு கீர்த்தனை அது :

'ஆ அம்பர உம்பரமும் - புகழ் ஆதிபன் பிறந்தார் - அமலாதிபன் பிறந்தார்' அன்பான பரனே ! - அருள் மேவும் காரணனே! - நவ அச்ஷய சச்சித - ரட்சகனாகிய உச்சித வரனே! '- கீர்த்தனை எண் : 33 (கிறிஸ்தவ கீர்த்தனைகள்)

மேற்குறித்த கீர்த்தனை அல்லாமல் அவர் எழுதிய மேலும் நான்கு கீர்த்தனைகள் 'ஞான கீர்த்தனைகள் 'என்ற கீர்த்தனை தொகுப்பில் (இது Enlarged and edited from the Lyrical compilations of the Rev.E.Webb and the Rev.G.T.Washburn.D.D. by the Rev.J.S.Chandler. Madras.the christian literature society for India in union with the Religious Tract and Book society. 1930) இருந்தது. அந்த கீர்த்தனைகள் இதோ: கீ.எண்: (144), (1967ஆம் ஆண்டு பதிப்பில்: 247), (நவீன பதிப்புகளில்: 214) 'ஞான சுவிசேஷமே நன்மை தரும் நேசமே' கீ.எண்:(147), 'இந்த சுவிசேஷம் போலெங்கும் அகப்படாது! ஏதோ என் பாக்கியம் இது!' 1930 ஆம் ஆண்டு பதிப்போடு இந்த கீர்த்தனை வழக்கொழிந்து போனது. கீர்த்தனை எண்: (301) இதுவும் இந்த 1930 ஆம் ஆண்டு பதிப்போடு நிறுத்தம்பெற்றது. 'சுவிசேஷம் கூறுவோம், வாறீர் - கன தேசிகரே!, உப தேசிகரே! - நாம் !'என்று தொடங்கும் இக் கீர்த்தனை. அடுத்ததாக, கனம் யோ.யாக்கோபு உபதேசியாரின் மணிமுடிப்படைப்பான கீர்த்தனை! - அது இன்றளவும் தேவாலயங்களில் பாடப்பட்டு வருகின்ற அருமையான கீர்த்தனை! கீ.எண்: (367), (1967 ஆம் ஆண்டு பதிப்பில்: 126), நவீன பதிப்புகளில் :106.

**பல்லவி**

'ஒரு மருந்தரும் குருமருந்து - உம்பரத்தில் நான் கண்டேனே!

**அனுபல்லவி**

'அருள் மருந்துடன் ஆனந்த மருந்து!
ஆதியில் தானாய் முளைத்த மருந்து!
வரும் வினைகளை மாற்றும் மருந்து!
வறுமையுள்ளோர்கே வாய்த்த மருந்து - ஒரு மருந்தரும்
'தீராத குஷ்டத்தைத் தீர்த்த மருந்து!
செவிடு குருடூமை - தின்ற மருந்து!
மானா திருத்துவமான மருந்து!
மனுவாய் உலகில் வந்த மருந்து ! - ஒரு மருந்தரும்'

இது போன்ற ஒப்பற்ற கீர்த்தனைகளை எழுதிய சுவிசேஷகரான உபதேசியார் கனம் யோ.யாக்கோபு சேலம் பகுதிகளில் சுவிசேஷ ஊழியம் செய்து வரும் காலங்களில், அவர் சேலம் அஸ்தம்பட்டி அடைக்கல நகரில் தனது மகன் வயலின் வித்வான் திரு .அருள்தாஸ் ஜேக்கப் அவர்களுடன் வாழ்ந்து, அங்குள்ள நியூகோர்ட் சேப்பல் (இன்றைய சேலம் அஸ்தம்பட்டி அடைக்கல நகர், CSI இம்மானுவேல் பேராலயம்) ஆலயத்தில் தனது 59 ஆம் வயதில் இறைபதம் சேர்ந்தார். அவரது பூதவுடல் அடைக்கல நகர் முற்பிதாக்கள் அடக்கம் செய்யப்பட்ட சேலம் 4 ரோடு பெரமனூர் சீர்திருத்த கிறிஸ்தவ கல்லறைத் தோட்டத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது. ஆனால் இன்று அவர் கல்லறை அங்கு எங்குமே காணப்படவில்லை.

'செத்தோர் உயிர்த்தே எழுந்த மருந்து!
ஜீவன் தவறா தருளும் மருந்து!
பக்தரைச் சத்திகரித்திடும் மருந்து!
பரம வாழ்வில் சேர்க்கும் மருந்து! - ஒரு மருந்தரும்
குருமருந்து!'

இப்படியான அநேக அற்புத கீர்த்தனைகளை எழுதி,பாடிய

கவிக்குயில் கனம் யோ.யாக்கோபு உபதேசியாரின் மூன்று கீர்த்தனைகள் மட்டுமே தற்பொழுது நம் கையில் உள்ளதும், தேவாலயங்களில் பாடப்படுவதுமான, கிறிஸ்தவ கீர்த்தனைகள் புத்தகத்தில் உள்ளது. அவர் எழுதிய மற்ற பற்பல கீர்த்தனைகள் கால ஓட்டத்தில் மறக்கப்பட்டு, பண் மறந்த கீர்த்தனைகளாக, பல பாடல் நூல்களில் இருக்கலாம். அவரது அற்புத கீர்த்தனைகள் நமது தேடலில் கிடைத்தால், அதனை அவரது வாழ்வோடு படைப்புகளாக பதிப்பிக்க ஆசை கொண்டுள்ளோம்.

கனம் யோ.யாக்கோபு உபதேசியாரின் வழித்தோன்றல்கள் இன்றும் ஐந்து மற்றும் ஆறாவது தலைமுறைகளாக சேலம் அஸ்தம்பட்டி CSI இம்மானுவேல் பேராலயத்தில் இறை இயேசுவை சேவித்து அவரது புகழை பிரஸ்தாபித்து வருகிறார்கள்.

**சங்கை அருமைநாயகம் வேதக்கண் ஐயர் :**

'ஐயையா நான் வந்தேன், - தேவ ஆட்டுக் குட்டி வந்தேன்' என்ற கீர்த்தனையை (கீ.எண்:202,185,156) தேவாலயங்களில் பாடக் கேட்கும் போது உருகாத நெஞ்சமும் உருகும். மேற்சொல்லப்பட்ட கீர்த்தனை அல்லாமல் 'இரங்கும் இரங்கும் கருணைவாரி ஏசு ராசனே! - பவ நாச மோசனே! என்ற கீர்த்தனை (கீ.எண்: 186,167,142) அதற்கு அடுத்ததாக, 'ஆத்தும அடைக்கலம் அன்புள்ள இயேசுவே! - அய்யா புகலிடம் தாரும்!' என்ற கீர்த்தனை (கீ.எண்: 262,237,205) இந்த மூன்று கீர்த்தனைகளும், இன்றும் நமது சீர்திருத்த கிறிஸ்தவ தேவாலயங்களில் பாடப்பட்டு வருகிறது. இவர் இது போன்ற பற்பல கீர்த்தனைகளை எழுதியுள்ளார். ஆனால் நம்மிடம் இவர் பெயரில் இந்த மூன்று கீர்த்தனைகள் மட்டுமே உள்ளது.இவர் எழுதிய 'கீர்த்தனை மாலை' இன்று வரை கிடைக்காமல் போனது ஏமாற்றம் அளித்தாலும் சேலம் வரலாற்றுச் சங்கம் மூலமாக தொடர்ந்து அந்த நூலைத் தேடிவருகிறோம்.

CLS பதிப்பித்த கிறிஸ்தவ கீர்த்தனைகள் ஏழாம் பதிப்பில் (1967), அதனைத் தொடர்ந்த 1982 ஆம் ஆண்டின் Reprinted பதிப்பிலும், இதற்கு முந்தைய சில பதிப்புகளிலும், கவிஞர் அகராதி பகுதியில் 'வேதக்கண், அ., உபாத்தியாயர், நாகர் கோயில் (வே.உபா.)என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் நாகர்கோவில் சங்கை அ.வேதக்கண் ஐயரின் சொந்த ஊராக இருக்கலாம். அவர் தனது ஊழியப் பாதையில் சேலத்தில் 11 ஆண்டுகள் SPG மிஷன் சார்ந்த ஊழியங்களில் ஈடுபட்டிருந்தார். அதே சமயம் சேலம் கிறிஸ்துநாதர் ஆலயத்திலும் (இன்றைய CSI கிறிஸ்து நாதர் ஆலயம்,கோட்டை,சேலம்-1) போதகராக பணி செய்துள்ளார். சங்கை அ.வேதக்கண் ஐயர் கி.பி.1897 ஆம் ஆண்டு இராஜ பிளவை என்ற நோயினால் பாதிக்கப்பட்டு ஜூலை மாதம் 1 ஆம் தேதி சேலத்தில் இறைபதம் சேர்ந்தார். அவரது பூதவுடல் சேலம் 4 ரோடு பெரமனூர் சீர்திருத்த கிறிஸ்தவ கல்லறைத் தோட்டத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

**கவிஞர் சா.ஈ.கிறிஸ்மஸ் :**

சேலத்தை தங்கள் பணியிடமாகக் கொண்டு சேலத்திற்கு தங்கள் படைப்புகள் மூலமாக நிலைத்த பெருமை சேர்த்த இந்த கீர்த்தனைக் கவிஞர்கள் வரிசையில் மூன்றாவதாக வருபவர் கவிஞர் சா.ஈ. கிறிஸ்மஸ், அவர் இங்கு எழுதி வெளியிட்ட கீர்த்தனை நூல் 'கீத போதினி' (கீத போதினி - கிறிஸ்மஸ், சேலம், 1898 -30 கீர்த்தனைகள்) இந்த நூல் இன்னும் கிடைக்காத நிலையில் அவர் எழுதிய கீர்த்தனை ஒன்று நம் கிறிஸ்தவ கீர்த்தனைகள் புத்தகத்தில் (கீ.எண்: 361,284,235) உள்ளது அது:

'உச்சித மோட்ச பட்டணம் போக ஓடி நடப்போமே! - அங்கே
உன்னத இயேசு மன்னவருண்டு, ஓயா இன்பமுண்டு'

**மொழிஞாயிறு தேவநேய பாவாணர்(1902-1981) :**

**'தமிழே உலகின் முதல் மொழி'** என்று சிங்கநாதம் முழங்கிய தேவநேய பாவாணர் இயற்றிய 'கிறிஸ்தவக் கீர்த்தனம்' இதில் கடவுள் வாழ்த்து முதல் ஆட்டுக் குட்டியானவரின் கலியாணம் வரை 28 தலைப்புகளில் கீர்த்தனைகள் உள்ளன.

இன்று சேலம் அரசு கலைக் கல்லூரி என அழைக்கப்படும் அன்றைய சேலம் நகரவைக் கல்லூரியில் 1944 ஆம் ஆண்டு முதல் 1956 ஆம் ஆண்டுவரை 12 ஆண்டுகள் தமிழ் விரிவுரையாளராக, தமிழ் உதவிப் பேராசிரியராக, தமிழ் பேராசிரியர் மற்றும் துறைத் தலைவராக தேவநேயர் பணியாற்றிய காலங்கள் அவர் வாழ்வின்



பொற்காலம்.சேலத்தில் சிறந்த பாவாணர் பல்வேறு தமிழ் ஆய்வு நூல்களை சேலத்தில் இருந்த காலத்தில் எழுதி முடித்தார்.அந்த காலங்களில் கல்லூரி வளாகத்தில் உள்ள இல்லத்தில் அவர் தங்கி வாழ்ந்து வந்தார். அவர் பணிசெய்த சேலம் அரசு கலைக் கல்லூரி அவர் பெயரில் சேலம் அரசு மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் கலைக் கல்லூரி எனப் பெயரிடவேண்டும் என்று சேலம் வரலாற்றுச் சங்கம் சார்பில் கோரிக்கை வைக்கிறோம்.

'மனந்திரும்பும் அரசுரைவாய் மலர்ந்த பெருந் தெய்வம்!
மறு உடையும் இல்லாமல் வறுமை கொண்ட தெய்வம்!
தினந்தினமும் நடந்து பதம் தேய்து இளைத்த தெய்வம்!
சிரஞ்சாய்க்க இடமின்றிச் சிரமமுற்ற தெய்வம்!
இனம் சனமாய் பாவிகளை ஏற்ற பெருந் தெய்வம்!
ஈனருடன் விருந்துண்ட எளியவரின் தெய்வம்!
சினஞ்சிறிய வருக்கு மிகச் சேவை செய்த தெய்வம்!
சீடரடி கழுவியவர் செருக்கழித்த தெய்வம்!

சேலம் கீர்த்தனைக் கவிஞர்களான இந்த நால்வரின் நிலைபெற்ற சங்கீத இசைத் தமிழ் சேவையினை இந்த எனது கட்டுரையில் எடுத்துரைத்துள்ளேன். இவர்களின் கிறிஸ்தவ தமிழ் இசை சேவை சேலம் கிறிஸ்தவ வரலாற்றில் என்றென்றும் போற்றி, நினைக்கப்படுவதாக.

**ஜே.பர்னபாஸ், சேலம்**

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

(வரலாற்று நெடுந்தொடர்-3)

## பேரிடி

முராரிராவின் அந்தரங்க ஊழியர்களின் ஓர் அதிகாரி தான் அந்தத் தூதன். அவன் உடை புழுதி படிந்து இரத்தமாய் இருந்தது. இடது கை துண்டிக்கப்பெற்று உதிரம் கொட்டிக்கொண்டிருந்தது. அவன் சோர்ந்து, மயங்கும் நிலையில் இருந்தான். நகர்ப்புறத்தில் குதிரை செத்து விழுந்து விட்டதாகவும் தான் ஒரு மைல் ஓடியே வந்ததாகவும் மிகவும் சிரமத்துடன் சொன்னான். முதலில் அவன் பண்டிதராவின் வீட்டுக்குப்போயிருந்ததால் அங்கிருந்து ஒரு பெரிய கூட்டம் அவனைத் தொடர்ந்து வந்து அரண்மனையின் வெளியில் நின்றது.

தாழ வணங்கிய அவனை, செய்தியைச் சொல்லுமாறு தாசர் பணித்தார். இந்த விவரங்களைத் தெரிவிக்கு முன்னால் தன் நாக்கு அறுந்து போகக்கூடாதா என்று அங்கலாய்த்துப் பேசத் தொடங்கினான், கள்ளர் துரோகி கொடுத்த தகவல் ஏமாற்று என்றும், தளவாயின் உடனடி சரணாகதி அநாவசியச் சண்டையைத் தவிர்க்கவும், காலந்தாழ்த்தவும் செய்யப்பட்ட தந்திரம் என்றும் தெரிவித்தான். இராமநாதபுரம் படை இரவெல்லாம் நடந்து விடியற்காலையில் கிளாவிருந்தபுரத்தை அடைந்து, முராரிராவ் படையை நன்கு சூழ்ந்து கொண்டது. முராரிராவ் நிபந்தனையின்றி சரண் அடைந்தால் உயிர்ப்பிச்சை அளிப்பதாகத் தளவாய் கூறினார். ஆனால் முராரிராவ் வாளை உருவிக்கொண்டு தளவாய்மீது பாய்ந்தார். வீரர்களும் வெற்றி அல்லது வீரமரணம் அடைவது என்று முழங்கிக்கொண்டு வெறியுடன் தாக்கத்தொடங்கினார்கள். உக்கிரமான சண்டை நடந்தது. ஆனால் பகைவரின் எண்ணிக்கை பலத்தால் முராரி உட்படப் பலர் வாளேந்திய படியே விழுந்து விட்டனர். அவர்கள் உடல்கள் கண்ட துண்டமாக்கப்பட்டன. பன்னிரெண்டு பேருக்குமேல் தப்ப வில்லை. தப்பியவர்கள் குதிரைகள் மீது ஏறி ஓடினார்கள். அறந்தாங்கியில் உள்ள முக்கியப் படைக்கு ஆபத்தைத் தெரிவிக்கும்படி அவர்களை அனுப்பிவிட்டு, அவன் இன்னொரு வீரனோடு நேராகத் தஞ்சைக்கு விரைந்தான். அறந்தாங்கியில் உள்ள முக்கியப் படையையும் ஒருவேளை தளவாய் திடீரெனத் தாக்கிப் பிடித்திருக்கலாம் என்று கவலையுடன் கூறினான்.

இந்த அவலக் கதையின் தொடக்கத்திலேயே பண்டிதராவ் கலங்கிவிட்டார். ஆனால் தமது பெருஞ்செல்வத்தின் ஏக வாரிசும், ஆசைக் கனவுகளுக்கெல்லாம் நடுநாயகமுமான தன் ஒரே மகன் கண்டதுண்டமானான் என்று கேட்டதும், தலையைத் தாழ்த்திச் சால்வையால் முகத்தை மூடிக்கொண்டார். விவரங்களைச் சொல்லி முடியும் வரையில் அந்நிலையிலேயே இருந்தார். அதிகாரி பேசி முடித்ததும் ஒரு பயங்கர அமைதி நிலவியது. எல்லோருடைய கண்களும் பண்டிதராவையே பார்த்தன. அவர் கைகளால் முகத்தை மூடிக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதார். அப்போது அவர்கள் நாட்டுக்கு ஏற்பட்டிருக்கும் இடுக்கணைப் பற்றி நினைக்கவே இல்லை. மந்திரியின் மகத்தான துக்கமே பெரிதாகத் தோன்றியது.

அப்போது அரண்மனையின் உள்வாசல் வழியாக ஒரு பெண் விரைந்து மண்டபத்துக்குள் நுழைந்து வந்தாள். என்ன சேதி என்று அரசர் அவளை விசாரித்தபோது அவள், சொன்னாள்: தன் கணவன் இறந்த செய்தியைக் கேட்டதும் முராரிராவின் மனைவி கதறிக்கொண்டே மயங்கிவிட்டதாகவும், அடுத்த அறையிலிருந்த அரண்மனை வைத்தியர் உள்ளே ஓடிச்சென்று பார்த்த போது அவள் இறந்துவிட்டிருந்ததாகவும் தெரிவித்தாள்.

கேட்ட அனைவரும் திடுக்கிட்டுப் பீதியடைந்தனர். அடி மேல் அடியாக வந்த அனர்த்தங்களைப் பார்த்து, ஏதோ தெய்வகோபம் ஏற்பட்டுவிட்டதோ என்று திகில் பிடித்தவர் போலானார்கள். ஆனால் ஓரிரண்டு பேர் தங்களையும் அறியாமல் 'இவள் தான் சதி, சதி! உண்மையான சதி. ஆண்டவன் கிருபை என்று பாராட்டி முணுமுணுத்ததும் கேட்டது.

இந்தச் செய்தியைக் கேட்டதும் முதியவர் முகத்திலிருந்து கைகளை எடுத்தார். முகம் சவம்போல் வெளுத்திருந்தது பணிப்பெண்ணைப் பார்த்து நைந்த குரலில்:

'அப்படியானால் அவளும் போய்விட்டாளா? இந்தக் கிழவனைத் தனியாக இந்தப் பூமியில் விட்டுவிட்டு அவர்கள் எல்லோருமே போய்விட்டார்களா? அவள் பதிவிரதை. நினைத்த மாத்திரத்தில் கணவனைப் போய்ச் சேர்ந்துவிட்ட புண்ணியவதி. என் நெஞ்சு கல் நெஞ்சு. அதனால் தான் அந்த உத்தமியைப் பின்பற்றாமல் வயது காலத்திலும் என் உயிரை இரும்புச் சங்கிலியால் கட்டியதுபோல் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறேன். இந்த நிலையை அடைவதற்குப் பழம் பிறவிகளில் என்ன கொடும்பாவமெல்லாம் செய்தேனோ? இந்த நாளைக் கண்டபின்னும் என் கண் இன்னும் அவிந்து போகாமல் இருக்கிறதே,' என்று அங்கலாய்த்தார்.

அரசர் உடனே அவரை நெருங்கி ஆறுதலாக அணைத்துக் கொண்டார்: 'பண்டிதரே, தெய்வ பக்தியில்லாதவர்கள் இந்தத் துன்பத்தைத் தாங்குவது மிகக் கடினமே. ஆனால்

தாங்கள் அறிவாளி. வயது முதிர்ந்தவர். பக்திமான். தாங்கள் கவலைப்படலாமா? இன்பத்தை வரவேற்கும் நாம் இடுக்கண் வருங்காலும் நகுவதே சிறப்பாகும் என்று கற்றுத் தந்ததே தாங்கள் தானே! ஆண்டவன் கொடுக்கிறான். ஆண்டவனே எடுத்துக்கொள்கிறான். உங்கள் துன்பம் மிகக் கடுமையானது தான். சாதாரண மனிதன் இதைத் தாங்கிக்கொள்ள இயலாது. ஆனால் ஞானியாகிய தாங்களும் கவலைக்கு இடங்கொடுக்கலாமா? தங்கள் ஒரே மகனும் என் சிறந்த நண்பனும் வீரமரணமா அடைந்துவிட்டார்? இல்லையே! மானமே பெரிதென்று கருதி நாட்டுக்காகப் போரிட்டு வீர மரணமடைந்தார். அந்தச் சந்தர்ப்பத்தில் வீரன் எவனும் அவர் செய்தது போலவே செய்திருப்பான். இத்தனை காலம் நீங்கள் எனக்கு குருவாகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமுமான மந்திரியாகவும் மாத்திரம் இருக்கவில்லை; அன்பிற்குகந்த தந்தையாகவும் இருந்து வந்திருக்கிறீர்கள். இப்பொழுதும் என்னைத் தங்கள் மகனாகக் கருதிக்கொள்ளுங்கள். என்னோடு இந்த அரண்மனையிலேயே தங்கிவிடுங்கள். எதிர்பாராமல் நாட்டுக்கு நேர்ந்திருக்கும் இந்த இக்கட்டான சமயத்தில் அரசாட்சியில் எனக்கு உதவி செய்யுங்கள். தாங்கிக்கொள்ளுங்கள் ஐயா. இங்கேயே என்னோடு இருந்துவிடுவதாக வாக்குக்கொடுங்கள். நான் உங்கள் மகனைப்போலவே இருந்து நீங்கள் இந்தப் பெருந்துன்பத்தை மறக்க என்னாலானதைச் செய்வேன்,' என்று அரசர் ஆறுதல் கூறினார். பண்டிதராவ் சிறிது ஆறுதலடைந்தவராகப் பேச ஆரம்பித்தார் :

'பிரதாப், நீங்கள் நல்லவர். தீர்க்காயுசாக இருந்து இந்த நாட்டை அரசாளுவீர்களாக. முராரி மீதும் முக்தாம்பாள் மீதும் நான் எவ்வளவு வாஞ்சை கொண்டிருந்தேன் என்பது உங்களுக்குத் தெரியும். ஒன்றன்பின் ஒன்றாகச் சடுதியாக வந்த துன்பம் மிகக் கொடுமையானது. துக்கத்தில் என்னை மறந்து ஏதேதோ பேசிவிட்டேன். நீங்கள் சொன்ன ஆறுதல் மொழிக்காகக் கடவுள் உங்களை ஆசீர்வதிப்பார். ஆனால் என் அரசவை நாட்கள் இன்றோடு முடிந்துவிட்டன என்றே நினைக்கின்றேன். நான் உங்களிடம் வேண்டுவதெல்லாம் வீண் பெருமைக்காகச் சேர்த்த என் சொத்துக்களை தகுந்த அறப்பணிகளில் செலவிட நீங்கள் உதவிடவேண்டும். அவசரமாகச் செய்யவேண்டும் என்பதில்லை. நாட்டை விவேகமாக ஆள்வதற்குரிய தகுதி உங்களுக்கு இருக்கிறது. தேர்ந்த மந்திரிகளும் இருக்கிறார்கள். நீங்கள் பெருந்தன்மையாகச் சொன்ன யோசனையை ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் இருக்கின்றேன். அதற்காக வருந்தவேண்டாம். பிரிந்தவர்களுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை ஆற்றச் செல்லுமாறு எனக்கு விடை கொடுங்கள். என் உயிர் நல்லகதி அடைய அவர்கள் எனக்கு ஈமக்கடன்களைச் செய்வார்கள் என்று இறுமாந்திருந்தேன். ஹூம், சேனாபதி உடனே தகுந்த படையோடு அறந்தாங்கி சென்று இனி நடக்கவேண்டியதைக் கவனிக்கட்டும்'– இவ்வாறு சொல்லிக்கொண்டே பெரியவர் எழுந்து மெதுவாக நடந்து வெளியில் அவருக்காகக் காத்திருந்த பல்லக்கை நோக்கிச் சென்றார். அரசரும் அவையினரும் மௌனமாக அவரை வழியனுப்பி வைத்தார்கள்.

## பழைய நண்பர்கள்

அன்று ஊரே விழாக்கோலம் பூண்டிருந்தது. தெருக்களெல்லாம் கொடிகளும் தோரணங்களுமாகக் காட்சியளித்தன. இடையிடையே உயர்ந்த வளைவுகள் ஓங்கி நின்றன. பகட்டான துணிகளும் கதம்ப மாலைகளும் அவற்றை அலங்கரித்தன. தூண்களில் கட்டியிருந்த ஓலைகள் ஒயிலாகச் சாய்ந்தாடிக்கொண்டிருந்தன. வீட்டு முகப்புகளில் சிறிய பித்தளை விளக்குகள் ஒளிவீசிக் கொண்டிருந்தன. பணக்காரர் மாளிகைகள் பகட்டிலும், தீபாலங்காரத்திலும் ஒன்றையொன்று போட்டி போடுவதைப் போலத் தோன்றின.

வெண்ணாறு சத்திரம் என்ற பெயரில் மகாராஜா பிரதாப்சிங் ஒரு புதிய சத்திரத்தைத் திறந்து வைத்தார். இறந்து போன அவருடைய தாயாரின் ஞாபகார்த்த புண்ணிய காரியங்களுக்காக இத்திருப்பணியைச் செய்திருந்தார் அவர்.

ஆயிரக்கணக்கான மக்கள் சத்திரத்தில் இலவசமாக உணவைப் பெற்று உண்டு மகிழ்ந்தனர்; அரசர் கையால் பரிசுப்பொருட்களையும் பெற்று ஆரவாரித்தனர்.

இதுமட்டுமின்றி, பலவித வேடிக்கைகளும் விளையாட்டுகளும் ஊரை நிறைத்தன. வாள் வித்தைக்காரர், மல்லர், ஜாலவித்தையாளர், இசையாளர், நாட்டியக்காரர், கனிகையர் உட்பட ஆங்காங்கே மக்களுக்கு வேடிக்கை காட்டிக்கொண்டிருந்தார்கள். கெம்பீரமான யானைகள், உயரமான ஒட்டகங்கள், தரையைத்தொடும் தாடியுடைய பெரிய காளைகள், சிலிர்க்கும் குதிரைகள் முதலியன ஆடம்பரமான அலங்காரங்களுடன் வீதிகளில் பவனி வந்தன. வேடிக்கை பார்க்கு சிறுவர்களும் நாட்டுப்புறத்தாரும் அவைகளின் பின்னே போய்க் கொண்டிருந்தார்கள். மேளக்காரர், நாதஸ்வரக்காரர், கொட்டுக்காரர் எல்லோரும் தெருவெல்லாம் இசை முழக்கிக்கொண்டிருந்தனர். மிட்டாய், விளையாட்டுச் சாமான்களின் வியாபாரம் பலமாக நடந்தது. சத்திரத்தின் உள்ளும் புறமும் நூற்றுக்கணக்கான பிராமணர்கள் ஏகோபித்த குரலில் வேதம் ஓதினார்கள். கடல் அலைபோல் எழுந்த அந்த ஓசை அரண்மனை மேள வாத்தியக் காரர்களின் முழக்கத்தை மூழ்கடித்தது.

மணம்புச் சாவடியின் அருகில் இரண்டு தெருக்கள் சேருமிடத்தில் மகாராஷ்டிரத்திலிருந்து சமீபத்தில் வந்த வாள்வீரன் ஒருவன் ஆபத்தான வேடிக்கைகள் காட்டிக்கொண்டிருந்தான். மொட்டைத் தலையில் எலுமிச்சம்பழத்தை வைத்து, கைகளில் கூர்மையான வாள்களைப் பிடித்து வீசிக் கொண்டு கொட்டுமேளத்திற்கு இசைய ஆடிக்கொண்டிருந்தான். பெரும்பாலும் சிப்பாய்களாலான பெருங்கூட்டமொன்று அவனை வியந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. நடுநடுவே கடினமான அல்லது ஆபத்தான வித்தை ஏதாவது செய்தபோது கூட்டம் பலமாகக் கைதட்டி ஆரவாரித்தது. கூட்டத்தின் வெளிவட்டத்தில் ஹவில்தார் ரகோஜி முன்னங்காலை ஊன்றி நின்று கத்தியவாறே வேடிக்கையை உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருந்தார். அவர் சீருடை அணிந்திருக்கவில்லை. பகட்டாக திருவிழா உடை அணிந்திருந்தார். குட்டையாக இருந்ததால் கால்களை உன்னிக் கழுத்தை நிமிர்த்திச் சிரமப்பட வேண்டியிருந்தது.

ஏறத்தாழ மூன்று வயதுள்ள அழகான சிறுமி ஒருத்தி அவர் வலது தோள்மீது குறுக்கே உட்கார்ந்திருந்தாள். அவள் வெள்ளிச் சரிகைபோட்டபட்டுஉடுப்புஅணிந்திருந்தாள். கூந்தல்கருத்துஅடர்ந்து சுருண்டு இருந்தது. தலைமயிர் கட்டுக் கடங்காமல் அவள் கண்கள் மீது வந்து விழுந்தது. அதை விலக்குவதற்காகத் தலையைக்

குலுக்கினாள். அது தண்ணீரில் மூழ்கி வெளிவந்த நாய்க்குட்டி உடலைச் சிலிர்ப்பது போலிருந்தது. அவளுடைய கரிய பெரிய கண்கள் அழகாக இருந்தன. கீழே விழுந்துவிடாமலிருப்பதற்காக ஹவில்தாரின் தலைப்பாகையை இரண்டு கைகளாலும் இறுகப் பிடித்துக்கொண்டிருந்தாள். கொட்டு இசைக்கு ஏற்ப ஆடத் தோன்றும்போதெல்லாம் தன் இரு கால்களாலும் அவரது நெஞ்சையும் முதுகையும் ஓங்கி ஓங்கி அறைந்து கொண்டிருந்தாள். அவளைவிட இரண்டு மூன்று வயது அதிகமான இன்னொரு சிறுமி சாதாரணமான உடை அணிந்து ஹவில்தாரின் அருகில் அவரது இடது கையைப் பிடித்தவாறு நின்றுகொண்டிருந்தாள். அவள் தனக்கு வேடிக்கை ஒன்றும் தெரியவில்லை யென்றும், தன்னையும் தோளில் தூக்கி வைத்துக்கொள்ள வேண்டுமென்றும் தன் பாபாவிடம் புகார் செய்வதும் கெஞ்சுவதாகவுமிருந்தாள். ஆனால் வாள்வித்தை பார்ப்பதில் மூழ்கிப் போன பாபா, சிறுமிகளின் நடவடிக்கைகளைக் கவனித்ததாகவே தெரியவில்லை.

ஆனால் சிறிது நேரத்தில் கீழே நின்ற சிறுமி வீறிட்டு அலறி பயத்தினால் அவரை இறுகப் பிடித்துக்கொண்டாள். ஹவில்தார் திரும்பிப் பார்த்தார். ஒரு குதிரையொன்று தன் சவாரியை எறிந்துவிட்டு வெறியுடன் வீதியில் பாய்ந்து வந்தது. அந்தக் குதிரைக்குப் பயந்து ஓடிய ஒருவன் குழந்தை பின் கால்களைப் பலமாக மிதித்துவிட்டிருந்தான். அவன் ஒரு பிராமணன். கால் கோணியிருந்ததால் பக்கவாட்டில் நடக்கின்றவன். அவன் உயரத்தைவிட அவனுக்குச் சுற்றளவு அதிகமிருக்கும்போலத் தெரிந்தது. 'கண் எங்கே ஐயா போச்சு?' என்றார் ஹவில்தார் ஆத்திரமாக. 'உங்களுக்கெல்லாம் கடவுள் பிடரியிலேயும் ரெண்டு கண் வச்சிருக்க வேண்டியது தான்.'

கோபப்படாதீங்கோ,' என்றார் பிராமணர். 'ஓடிவந்த அவசரத்திலே குழந்தையைக் கவனிக்கலை . . . அடடே! ரகோஜியா?' அடடே! ராமசாஸ்துருலு! இத்தனை வருஷமா காணோமே! எங்கே போயிருந்தாய்?' ஹவில்தாருக்கு ஒரே வியப்பு! ராமசாஸ்துருலு ஹவில்தாரின் பாலிய சிநேகிதனும், பள்ளித் தோழனுமாவார். பல ஆண்டுகள் கழித்து இப்போதுதான் சந்திக்கிறார்.

காசியிலேருந்து எப்போ திரும்பி வந்தாய்? நீ, எங்கே திரும்பிவரப் போகிறாய்னு நாங்கள் எல்லாம் நினைத்தோம்.

கங்கையிலுள்ள முதலைகள் உன்னைச் சாப்பிட்டு அஜீரணத்தால் கஷ்டப்படுவதாக இங்கே பேச்சு' என்றார். 'ஹா, ஹா ஹா' என்று சாஸ்துருலு பலமாகச் சிரித்தார். 'உயிரோடுதான் இருக்கேன். இப்பத்தான் நீயே பாக்கிறயே! சாகிறதுக்கு மனசு வரல்லை. ஆமாம் இதுயாரு இந்தச் சின்னம்மா? உன் பேத்திதானே! ஹூம், அவள் போட்டிருக்கிற பட்டு உடுப்பைப் பாத்தா உனக்கு சண்டையிலே கொள்ளை பலமாகக் கிடைச்சிருக்கும்னு தோணறது.'

'அவள் என் பேரப்பெண்ணில்லை. இறந்து போயிட்டாரே நமது பழைய சிநேகிதர் பண்டிதராவ், அவர் பேத்தி.' 'என்ன, பண்டிதராவ் காலமாயிட்டாரா?'

ஆன மாதிரித்தான். ஒருவேளை ஆகியும் இருக்கலாம். ஆமா நீ காசியிலிருந்து எப்போது திரும்பி வந்தாய்? இந்தச் சங்கதி எல்லாம் தஞ்சாவூரிலே சின்னப் பிள்ளைக்குக்கூடத் தெரியுமே.' 'நேத்து சாயங்காலம் தான் வந்தேன்.'

சாப்பாட்டுக்கும் தானத்துக்கும் கணக்கா வந்திருக்கே. பிராமணனுக்குச் சொல்லியா தரணும்?'

'அப்படித்தான் தோணும். ஆனா ரகோஜி இந்த விழாவைப் பத்தி நான் கேள்விப்படவே இல்லை. காசிக்குப் போனதிலேருந்து புரோகிதத் தொழிலை விட்டுட்டேன். பிறர் சமைச்சதைச் சாப்பிடறதுமில்லை. நான் வந்திருப்பதைக் கேள்விப்பட்டு புரோகிதர் சொல்லி அனுப்பியிருந்தார். பசுவும் சால்வையும் கொடுக்கிறதாகவும் இருந்தது. ஆனால் நான் விருந்துக்குப் போகவில்லை. பொருள்களை வாங்கிக் கொள்ளவும் இல்லை. அதிருக்கட்டும், பண்டிதராவ் சமாச்சாரத்தை முதலில் சொல்லு. அவர் பேத்தி உங்கிட்ட எப்படி வந்து சேர்ந்தாள்? இப்போ காலை மிதித்தேனே அந்தக் குழந்தைதான் உன் பேத்தியா?'

ஆமாம் காவேரிதான் என் பேத்தி. என் மகன் ரகுநாத் தெரியுமில்லே உனக்கு. அவன் மகள் தான் இவள். இன்னும் இரண்டு சிறிசு இருக்கு. ஒரு பையன். அடுத்தது பொண்ணு–' 'அப்படியானால் நீ இப்போ படையில் இல்லையா?' 'இல்லை. இப்போ மூணு வருஷமா இல்லை. வா, அந்த மண்டபத்தில் உக்காந்து பழங்கதை பேசலாம். எல்லாம் விவரமாகச் சொல்றேன். அப்பப்பா, நாம் ஒருத்தரை ஒருத்தர் பார்த்து பதினோரு வருஷம் ஆகிறதில்லியா?'

அருகாமையில் கூட்டம் அதிகமில்லாமல் இருந்த மண்டபத்தை நோக்கி இருவரும் நடந்தார்கள். ரகோஜி தோளிலிருந்த குழந்தையைக் கீழே இறக்கிவிட்டார். அங்கேயே விளையாடிக்கொண்டிருக்கும்படி சிறுமிகளிடம் சொல்லிவிட்டு இருவரும் படிகளில் உட்கார்ந்து கால்களை நீட்டிக்கொண்டு நெடுநேரம் கதை பேசுவதற்குத் தயாரானார்கள்.

அப்படியானால் நீ காசிக்குப் போனபிறகு இங்குள்ள செய்தி எதுவுமே கேள்விப்படவில்லையா?' என்று பேச்சைத் தொடங்கினார் ஹவில்தார். 'ராமேஸ்வரத்திலிருந்து திரும்பிய பைராகிகள் சிலரை ஹரிதுவாரத்தில் கண்டேன். சேதுபதியின் தளவாய், பண்டிதராவின் மகனைப் போரில் கொன்றுவிட்டாரென்றும் பிறகு நமது சேனாபதி போர்த்தலைமை ஏற்று பெரிய மறவர்களை வென்றுவிட்டதாகவும் சொன்னார்கள். பண்டிதராவைப்பற்றி ஒன்றுமே கேள்விப்படவில்லையே!'

தளவாய் வைத்த பொறியில் இந்தப் பெண்ணின் தகப்பன் மாட்டிச் சண்டையில் இறந்த நாளில் தான் இவள் பிறந்தாள். கணவன் இறந்ததைக் கேட்டதுமே இவளைப் பெற்றவள் உயிரை விட்டுட்டாள். பதிவிரதை அவள்தான். பண்டிதராவுக்கு வேறு பிள்ளைகள் கிடையாதே! தஞ்சாவூரில் உறவினர்களும் கிடையாது. ஒரேயடியா உடைஞ்சுபோயிட்டார். ஒருநாள் என்னைக் கூப்பிட்டுவிட்டார். எனக்கு எல்லாமே வெறுத்துவிட்டதப்பா. அப்படியே காட்டுக்குப் போறேன். நீ இந்தக் குழந்தையைப் பார்த்துக்கொள்ளணுமே என்றார். என்னாலும் மறுத்துச் சொல்ல முடியலே.' 'எல்லோரையும் விட்டுவிட்டு எப்படி உன்னைப்போய்ப் பிடித்தார்?'

எனக்குந் தெரியவில்லை. பழைய பள்ளிச் சிநேகத்தை நினைச்சுப் பார்த்திருப்பார்னு தோணுது. அந்த நாட்களைப் பத்திப் பிரியமாப் பேசினார். நாம் செஞ்ச சிறு குறும்புகளை எல்லாம் நினைவிலே வச்சிருந்தார். நாம் எல்லோரும் தினமும் எப்படி ஆத்தங்கரையில் விளையாடினோம் என்கிறதையெல்லாம் நினைவு வச்சுப் பேசினார். உன்னைப் பத்தியும் பேசினார். நீ தஞ்சாவூரை விட்டுப் போயிட்டியேன்னு சொல்லிக்கொள்வார்.

திவானோட அப்பா மாதவ பண்டிதனும் அவர் சிநேகி தரும் ஒருநாள் நம்மோடே சண்டைக்கு வந்தது, நாம் அவங்களைப் பிய்ச்சுக் கட்டினது எல்லாத்தையும் நினைவில் வைச்சிருந்தார். அவ்வளவு துக்கத்தையும் மனசிலே தாங்கிக் கொண்டு, சின்னக் குழந்தையாட்டம் பழைய நாட்களைப் பத்திப் பேசியதைக் கேட்டதும் எனக்குக் கண்ணீர் வந்துட்டது. அவர் காலிலே விழுந்து கெஞ்சினேன் போகவே படாதுன்னு. ஆனால் கேக்கல. மகாராஜாவும் எவ்வளவோ சொல்லிப் பாத்தாரு. ஒண்ணும் நடக்கல.'

'பிராமணப் பெண் குழந்தை உன்னோடு என்னமா இருக்க முடியும்?' ' அவள் என்னோடு இருக்கலை. வல்லத்தில் ஒரு சின்ன வீட்டில் இருக்கிறாள். பண்டிதராவின் செத்துப்போன மனைவியின் உறவினர், ஒரு வயசான கைம்பெண், அவளைக் கவனித்துக் கொள்கிறாள். வேலைக்கு ஒரு சூத்திரப் பெண்ணும் இருக்கிறாள். நான் தான் மேற்பார்த்துக்கொள்கிறேன். முக்கால்வாசிப் பொழுதை அங்கே தான் கழிப்பேன். இன்னிக்கு இந்தத் தமாஷ் காட்டறதுக்காக குழந்தைகளை மாட்டுவண்டியில் வச்சு கூட்டிக்கிட்டு வந்தேன்.'

'உனக்கு இந்த வேலைக்குச் சம்பளம் உண்டா?'

'உண்டு. மாசம் அஞ்சு பகோடாவும், வருஷத்துக்கு அம்பது கலம் நெல்லும் கிடைக்குது.'

'நிலபுலங்களை பார்க்கிறது யாரு?'

'மகாராஜாவையே பார்த்துக்கச் சொல்லிவிட்டார்னு நினைக்கிறேன். எங்களுக்கு வேண்டிய அரிசியை அமாத்யா அனுப்பிடுறார். மேல் செலவுக்கு என்னிடம் எப்பவும் பத்து பகோடா இருக்கும். செலவாக ஆக வாங்கிக்கொள்வேன். என் சம்பளத்தை ஒழுங்காகக் கொடுத்துடுறார். இராணுவம் மாதிரி இல்லை.'

'நல்ல யோகக்காரன் தான் நீ' என்றார் பிராமணர் புன்சிரிப்புடன்.

'உன்னிடம் உள்ளதைச் சொல்றேனே. ஹவில்தார் வேலையிலேயே நான் திருப்தியாய் இருந்திருப்பேன். ஒளிக்காமல் சொல்றேன், பண்டிதராவ்மேல் எனக்குக் கோபம். வேலையை விட்டு ஓய்வு பெற்ற பிறகு என்னை வெளியில் கண்டால் தெரிஞ்சதாகவே காட்டிக்கமாட்டார். அவர் மனைவியை எனக்கு சின்னதிலே தெரியும். படையிலே சேர்றதுக்கு முன்னால் அவள் தகப்பனாரிடம் வேலை பார்த்தேன். அவள் கூட எனக்காக ஒன்றிரண்டு தடவை அவரிடம் பேசிப் பார்த்தாள். ஆனால் அவர் எனக்காக சேனாபதியிடம் பேசவே இல்லை. அதனாலே எனக்குக் கசப்பாக இருந்தது. அவர் கூப்பிட்டனுப்பியபோது விறைப்பாக நடந்து கொள்ளணும்னு நினைச்சு கிட்டுத்தான் போனேன். ஆனால் அவர் என்னிடம் நடந்து கொண்டதையும் பாலிய நாட்களைப் பற்றிப் பேசியதையும் பார்த்தபோது நான் பொம்பளை மாதிரி அழுதுட்டேன். அந்த நாட்களை எண்ணி அவருக்காக உயிரையும் கொடுக்கத் தயாராகிவிட்டேன்.' 'அப்புறம் என்ன நடந்தது?' நாங்கள் எல்லோரும் வல்லத்துக்குப்போய் கொஞ்சநாள் இருந்தோம். அவரை எப்படியும் இங்கே தங்க வைக்கணும்னு மகாராஜா முயற்சி பண்ணினார். முடியவில்லை. தகுந்த பரிவாரத்தோடு காசிக்கு அனுப்பி வைக்கச் சம்மதித்தார். இதற்குள் சேனாபதி வெற்றியடைஞ்ச செய்தி கிடைச்சது. மறுநாள் காலை பண்டிதராவைக் காணலை. மகாராஜா எங்கெங்கோ ஆட்களை அனுப்பித் தேடச் செய்தார். அவர் அகப்படலை. காசிக்கு இரண்டுபேரை அனுப்பித் தேடினார். அவர் கிடைக்கவேயில்லை. மனமுடைஞ்சு எங்கேயாவது தெரியாத இடத்தில் செத்துப்போயிருப்பார்னு எனக்குப் படுது. ஒரு வேளை தற்கொலை செய்துகொண்டாரோ என்னவோ?'

ரொம்பப் பரிதாபம். கேட்கச் சங்கடமாயிருக்கு' 'சரி, சரி. நான் என் கதையைச் சொல்லியாச்சு. நீதான் இனி உன் கதையைச் சொல்லணும். ஆனால் இன்னைக்கு நேரமாயிடிச்சு. குழந்தையை உடனே வல்லத்துக்குக்கொண்டு போய்ச் சேர்க்கணும். நீ ஒருநாள் அங்கு வாயேன். வந்து கதையெல்லாம் சொல்லு' என்றார் ஹவில்தார்.

கண்டிப்பா வர்றேன். அதுவும் சீக்கிரமே வருகிறேன்' என்று விடைபெற்றுச் சென்றார் பிராமணர் ராமசாஸ் துருலு.

**தொடரும்...**

---



# ஆலயமணியோ(இ)சை..!

Dr. ஜான்சி பால்ராஜ்
வன்னியன் குடியிருப்பு

ஒலிகளின் ஒருங்கமைவு இசை, இசை மனிதனை மட்டுமல்ல பிற உயிரினங்களையும் மனம் இலகிக்க செய்து ஆற்றுப்படுத்தக் கூடியது. சூழ்நிலைக்கு தகுந்த உணர்வுகளை நுண்ணிய நரம்புகள் மூலம் ஏற்படுத்தி மூளையில் இனிய இரசாயன மாற்றத்தை நிகழ்த்தவல்லது. மனித வாழ்வில் பிறப்பு திருமணம், சடங்குகள், சமய வழிபாடுகள், இறப்பு ...என்று அனைத்துத் தருணங்களிலும் இசை ஓர் அங்கமாகி விட்டது.

குறிப்பாக, சமயவழிபாட்டு முறைகளில் இசை மிகப்பெரும் இடத்தைப் பிடித்திருக்கிறது. எல்லா சமய முறைகளிலுமே இது இருந்து வருகிறது. காலத்திற்கு ஏற்ப அந்தந்த காலகட்டத்தின் மக்களின் இசைஞான வளர்ச்சி, மற்றும் இசைக்கருவிகளின் கண்டுபிடிப்புகளுக்கு ஏற்ப மனிதன் தனது இசைக்கும் திறனில் புதிய பரிமாணத்தை மேம்படுத்திக் கொண்டே வருகிறான்.

கிறித்தவ சமய வழிபாட்டு முறைகளிலும் ஆரம்பம் முதல் இறுதிவரை இசை தான் அதிக இடத்தைப் பிடித்திருக்கிறது. இறை வேண்டல்கள் கூட இசை வடிவில் தான் நடைபெறுகின்றன. பெரும்பாலான திருச்சபைகளில் அதற்கென்றே பயிற்சியளிக்கப்பட்ட பாடகர் குழுக்களையும் இசை கலைஞர்களையும் கொண்டு வழிபாட்டு முறைகள் நடத்தப்படுகின்றன. இத்தகைய முறை

கிறித்தவ திருச்சபைகளில் அவை ஏற்படுத்தப்பட்ட ஆரம்ப காலம் முதலே ஆலயங்களில் மிஷனெரிகளால் அறிமுகப்படுத்தப்பட்டு கிறித்தவ மரபாகவே பின்பற்றப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

கிறித்தவம் தோன்றி வளர்ந்த நாடுகளிலும் இந்த இசையோடான வழிபாடுகள் தான் இருந்து வருகிறது. தேவாலய வழிபாட்டின் ஆரம்பமே மணியோசை தான் இசையாக ஒலிக்க செய்யப்படுகிறது. உலோக தட்டுகளை அல்லது உலோக மணிகளை ஒலிக்க செய்து பக்தர்களை ஆலயத்திற்கு அழைக்கும் முறை கிறித்தவத்தின் பிரத்யேக வழக்கம்.

இந்திய ஆலயமணிகள் ஆரம்பத்தில் வட்ட வடிவ உலோகத் தட்டுகளில் மரம் அல்லது உலோகத்தால் ஆன நீண்ட கம்பு அல்லது கம்பிகளால் அடித்து ஒலி எழுப்புவர். அது ஆலயத்தை சுற்றியுள்ள குறிப்பிட்ட தொலைவிற்கு கேட்கும். ஒரு வழிபாடு முறைமைத் தொடங்கும் முன்னர் சரியான இடைவெளியில் இரண்டு அல்லது மூன்று முறை இம்மணியானது அடிக்கப்படும். அதற்குள் மக்கள் ஆயத்தமாகி ஆலயத்திற்குள் வந்து விடுவர். அதன் பின்னரே ஆலய வழிபாடுகள் ஆரம்பமாகும். அது மட்டுமின்றி திருச்சபையாரின் வீடுகளில் திருமணங்கள் அல்லது வேறெந்த சிறப்பு தினங்களிலும் சிறப்பு வழிபாடுகள் நடத்த விரும்பினும் ஆலயத்தில் இம்மணியோசையை ஒலிக்கசெய்து பின்னரே அவற்றிற்கான வழிபாடுகள் நடத்தபடும்.

ஒருவர் இறந்து போனாலும் அவரது இறப்பை அறிவிக்கும் நோக்கோடு ஆலயத்தில் மணி இசைக்க விடப்படும். அது விட்டுவிட்டு குறிப்பிட்ட இடைவெளியில் தொடர்ந்து அடிக்கப்படும். இதற்கு துக்கமணி என்று பெயர். இம்மணியோசையை கேட்கும் அனைவரையும் துக்கம் தொற்றிக் கொள்வதோடு யார் இறந்தது என்று ஒருவரையொருவர் கேட்டு அறிந்து கொள்ளவும் ஏதுவாக இருக்கிறது.

அதுமட்டுமின்றி மின்சாரம், ஒலிபெருக்கி போன்ற வசதிகள் இல்லாத காலகட்டத்தில் இந்த ஆலயமணி யோசை தான் அந்த ஆலயம் அமைந்துள்ள கிராமத்தின் எந்தவொரு அவசர தேவைகளையும் பொதுமக்களுக்கு அறிவிக்கவும் உதவியாக இருந்து வந்திருக்கிறது. திடீர் வெள்ளப்பெருக்கு, கிராம நல பொதுக்கூட்டம், எச்சரிக்கை செய்திகள் போன்றவற்றை மக்களுக்கு அறிவிக்கவும் மிக வேகமான ஒலிப்பு முறையுடன் திடீரென அடிக்கப்படும் மணியோசையை கேட்டு மக்கள் ஆலயத்தின் அருகில் கூடி தங்களது மிக முக்கியமான ஊர் பொது காரியங்களை பேசிக்கொள்வர்.

திருச்சபைகளின் தலைமையாக செயல்படும் சேகரங்களில் (pastorate) நடைபெறும் பெரிய அளவிலான பண்டிகைகளில் அச்சேகரத்திற்கு உட்பட்ட சபைகளிலிருந்து பெருந்திரளாக சபைமக்கள் சென்று பங்கு பெறுவர். திருநெல்வேலி திருமண்டலத்தில் உள்ள சேகரங்களில் பெரும்பாலானவற்றில் இத்தகைய பண்டிகைகள் நடைபெறும் போது அந்தந்த கிளை சபைகளிலிருக்கும் வட்டவடிவ உலோக மணித்தட்டுகள் கொண்டு வரப்பட்டு அவற்றை வரிசையாகத் தொங்கவிட்டிருப்பர். பின்னர் வழிபாடு தொடங்கும் முன்னர் குறிப்பிட்ட நேரத்தில் அந்த உலோகமணிகள் வரிசையாக தட்டி ஒலியெழுப்ப படுகிறது. இதில் அனைத்து சபையினரின் இதயங்களும் உணர்ச்சிப் பெருக்கால் ஒருமித்து, மகிழ்கின்றன இன்றும்.

இதிலும் சிறப்பாக, திருநெல்வேலி மாவட்டத்தில் நாங்குநேரி தாலுகாவில் உள்ள டோனாவூர் என்ற கிறித்தவ சிறப்புமிக்க ஊர் உள்ளது. அவ்வூரில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், ஏமிக்கார்மைக்கேல் என்ற ஐரோப்பிய பெண் மிஷனெரி வந்து சமயப்பணியோடு சமூகப்பணியும் செய்து அங்கு நிறுவிய காப்பகம் ஒன்றை டோனாவூர் ஐக்கியம் என்ற பெயரில் ஏற்படுத்தினார். அதில் கைவிடப்பட்ட மற்றும் சமூகத்தில் இழிந்த நிலைக்கு தள்ளப்பட்டோரை மீட்டெடுத்துக் காப்பாற்றினார். அவர்களுக்கென்று அந்த மிஷனெரியால் கட்டப்பட்ட அழகிய ஆலயம் இந்திய ஐரோப்பிய கட்டடக்கலைக்கு சான்றாக இன்றும் உயர்ந்து நின்று கொண்டிருக்கிறது. அதில் ஆலய அழைப்பு மணியாக முற்றிலும் வித்தியாசமான மணி ஒன்று உள்ளது. இது நீண்ட பதினெட்டு உலோக கம்பிகள் பக்கவாட்டில் ஒன்றோடொன்று இணைக்கப்பட்ட அழகிய தோற்றமுடையது. அதனை சிறிய அளவிலான மர சுத்தியல் கொண்டு சீராகத் தட்டி ஒலி எழுப்புவதன் மூலம் விரும்பும் இனிய பாடலின் இசையை ஏற்படுத்தலாம். இது அவ்வாலயம் கட்டப்பட்டது முதல் (கி.பி.1927) அங்கு அவ்வாலயத்தின் கோபுரத்தில் அமைக்கப்பட்டுள்ளது. (தகவல்- திரு ஜெரேமியா ஆனந்தா, டோனாவூர் ஐக்கிய செயலாளர்).

ஐரோப்பாவிலிருந்து கொண்டு வரப்பட்ட இப்புதியவகை மணி அப்போதைய ஐரோப்பிய ஆலயங்களில் அன்றைய காலகட்டத்தில் வழக்கத்தில் இருந்திருக்க வேண்டும் என்பதை



தெரிவிக்கிறது. தினமும் மூன்று வேளை திங்கள் முதல் ஞாயிறு வரை ஒவ்வொரு நாளுக்கும் உரிய குறிப்பிட்ட பாடல்கள் இம்மணியின் மூலம் அவ்வாலயத்தில் இசைக்கப்படுகிறது. காலை ஆறு மணி, மதியம் ஒரு மணி, இரவு ஒன்பது மணி என்று சரியாக மூன்று முறை இம்மணி அடிக்கப்படுகிறது. இறந்தவர்களின் இறப்பை அறிவிக்கவும் இம்மணியே துக்கத்தை வெளிப்படுத்தும் மணியாக அடிக்கப்படுகிறது.

மணியோசை மக்களின் மனங்களைத் தட்டும் இசையாக இன்றைய நாட்களில் பல்வேறு மாற்றங்களடைந்து சமய வழிபாட்டு முறைகளில் முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளது.

# எமில் அண்ணனின் தரிசன பாடல்கள்...

திருமதி. நிருபா ஜேசுவடியான், சென்னை

“கடவுள் ஒருவர் இல்லை” என தெருத்தெருவாக பிரச்சாரம் செய்தவரை, ஒரே ஒரு தேவன் இருக்கிறார் என அகில உலகத்திற்கும் பறைசாற்றும் அளவிற்கு தேவனால் பயன்படுத்த முடியுமா? முடியும் என்பதை இக்கட்டுரையின் கதாநாயகன் வாழ்விலிருந்து நாம் கண்டுகொள்ளலாம். இசை மூலமாக உறங்கிக் கொண்டிருக்கும் திருச்சபை விசுவாசிகளை இன்றும் இவரது பாடல்கள் உயிர் பெறச் செய்து கொண்டிருக்கிறது. மகிழ்வோம் மகிழ்வோம், அல்லேலூயா! கர்த்தரையே ஏகமாய்த் துதியுங்கள், இயேசு கிறிஸ்துவின் நல் சீடராகுவோம், ஜீவிக்கிறார் இயேசு ஜீவிக்கிறார்... போன்ற பாடல்களுக்கு சொந்தக்காரரான டாக்டர்.எமில் ஜெபசிங் அவர்கள் இன்று நம் மத்தியில் இல்லை என்றாலும் அவரது பாடல்கள் இந்தியாவின் பல கிராமங்களில், பல மொழிகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

போதகருக்கு மகனாகப் பிறந்தாலும் தன் குடும்பத்தில் ஏற்பட்ட வறுமை அவரை கிறிஸ்துவை விட்டு தூரம் போக செய்தது. கிறிஸ்துவை விட்டு தூரம் போகுதல் என்றால் ஏதோ அவரை மறந்து விடுவது மட்டும் அல்ல; அவர் உண்மையான தெய்வம் இல்லை என்று மக்கள் மத்தியில் பிரச்சாரம் செய்யும் அளவிற்குத் தூரமாக சென்றார். “கடவுள் இல்லை; கடவுளை நம்புகிறவன் முட்டாள்” என்று கோஷம் போட்டு செல்லும் கூட்டத்தை கண்டார். அவர்கள் முழங்கிய இவ்வார்த்தைகள் எமில் ஜெபசிங்கின் மனதில் ஆழமாக பதிந்தன. தான் படித்த வேதமோ “தேவன் இல்லை என்று மதிகேடன் தன் இருதயத்தில் சொல்லிக் கொள்கிறான் என்று கூறுகிறது. ஆனால் கடவுள் என்று ஒருவர் இருந்தால் நம் குடும்பத்திற்கு இத்தனை வறுமை நேரிட வாய்ப்பு இல்லை” என்று எண்ணினார். அக்குழுவினருடன் தன்னையும் இணைத்துக் கொள்ள ஆசைப்பட்டார். அவற்றை தலைமை தாங்கிய ஈ.வே.ரா பெரியாரை சந்தித்து பேசினார். பின் முழுவேகத்துடன் அவருடன் இணைந்து பணி செய்ய ஆரம்பித்தார். கம்யூனிசத்திற்காக தன் உயிரையும் கொடுக்க தயாராக இருந்தார். தகர டப்பாவினால் ஒலிபெருக்கி ஒன்றை உருவாக்கி தெருத் தெருவாக, கிராமம் கிராமமாக சென்று கடவுள் இல்லை என்று பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தார். விரைவில் ஒரு



வட்டாரத்திற்கே தலைவராக அமர்த்தப்பட்டார். கம்யூனிசத்திற்காக அநேக நாடகங்கள், பாடல்கள் என எழுதி நோட்டு நோட்டாக இரண்டு அடி உயரத்துக்கு அடுக்கி வைத்திருந்தார். இதனை ஒரு கிறிஸ்தவ பெற்றோர்களால் எப்படி சகிக்க முடியும்? ஒவ்வொரு நாள் இரவிலும் தன் மகனுக்காக அவர்கள் ஏறெடுத்த கண்ணீர் ஜெபங்கள் ஆண்டவரின் பாதத்தை நனைத்தது. 'பக்தியுள்ளவனைக் கர்த்தர் தமக்காக தெரிந்து கொண்டார் என்று அறியுங்கள்' (சங்கீதம் 4:3) என்று வேதவசனம் கூறுகிறது. ஆம்! தேவனுக்கு ஊழியம் செய்யும் ஊழியர்களின் பிள்ளைகளை தேவன் இரட்சிக்காமல் விட்டு விடுவாரோ? தேவன் அவரை சந்தித்து தன் பிள்ளையாக ஏற்றுக்கொண்டார். கடவுள் இல்லை என்று போராடியவர், 'ஒரே ஒரு கடவுள் மட்டுமே உண்டு, அவர் இயேசு கிறிஸ்து' என்று பிரச்சாரம் செய்ய ஆரம்பித்தார்.

அன்று ஒரு நாடகத்தில் 'கடத்தப்பட்ட ரத்தினம், மீட்கப்பட்ட ரத்தினம், ஒன்று கூடி இன்றே வாருங்கள்' என்று எழுதிய வரிகளை 'உறக்கம் தெளிவோம், உற்சாகம் கொள்வோம்' என மாற்றி எழுதினார். இன்றும் உறங்கிக் கொண்டிருக்கும் திருச்சபைகளை இப்பாடல் தட்டி எழுப்பிக் கொண்டிருக்கிறது. தன் தகப்பனார் போதகர் Y. C. நவமணி ஐயா அவர்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி எமில் வாழ ஆரம்பித்தார். நவமணி ஐயரும், தன் பிள்ளைகளுக்கு முன் மாதிரியான தகப்பனாகவும், தன் திருச்சபை விசுவாசிகளுக்கு சிறந்த மேய்ப்பனாகவும் வாழ்ந்து காட்டினார். இயேசுவிடம் ஜெபிக்காமல் காலை அவர் ஒருபோதும் எழும்பியதில்லை, இயேசுவின் முகத்தை பாராமல் ஒரு நாளும் மனிதர் முகத்தை பார்த்ததில்லை, இயேசுவிடம் கேட்காமல் பிரசங்க பீடம் ஏறியதில்லை. கிறிஸ்துவுக்காக தூத்துக்குடி, சாயர்புரம், பரமக்குடி, உக்கிரன்கோட்டை, சாத்தான்குளம், பண்ணைவிளை, டோனாவூர், திரவியபுரம் என தமிழகத்தின் பல இடங்களுக்கு கிறிஸ்துவுக்காக அலைந்து திரிந்த கால்கள், அவருக்காக ஆத்துமாக்களை சேர்த்து வைத்ததேயன்றி தன் பத்து பிள்ளைகளுக்கும் சொத்து சுகங்கள் ஒன்றும் சேர்த்து வைக்கவில்லை. மாறாக இயேசு என்ற உயிர்த்தெழுந்து இன்றும் ஜீவிக்கும் தெய்வத்தை அறிமுகப்படுத்தி விட்டார். இவ்வாறு இயேசுவோடு உறவாடிய தன் தகப்பனாரின் வாழ்வை பார்த்த மகன் எமில் ஜெபசிங் தானும் அவ்வாறே வாழ தேவனிடம் அர்ப்பணித்தார். நவமணி ஐயர் அவர்கள் தன்னுடைய, 74ம் வயதில் கிறிஸ்துவின் இராஜ்ஜியத்தில் பிரவேசித்தார். தன் தகப்பனாரின் அடக்க ஆராதனையின் போது எமில் ஜெபசிங் பொருள் நிறைந்த இப்பாடலை இயற்றி தன் தகப்பனுக்கென சமர்ப்பித்தார்.

அழகாய் நிற்கும் யார் இவர்கள்?
திரளாய் நிற்கும் யார் இவர்கள்?
சேனைத் தலைவராம் இயேசுவின் பொற்தளத்தில்
அழகாய் நிற்கும் யார் இவர்கள்?

ஒரு தாலந்தோ இரண்டு தாலந்தோ
ஐந்து தாலந்தோ உபயோகித்தோர்
சிறிதானதோ பெரிதானதோ
பெற்ற பணி செய்து முடித்தோர்

தனிமையிலும் வறுமையிலும்
லாசரு போன்று நின்றவர்கள்
யாசித்தாலும் போஷித்தாலும்
விசுவாசத்தைக் காத்தவர்கள்

இன்றும் இப்பாடல் மரித்த பரிசுத்தவான்களை நினைவுகூர்ந்து பாடப்பட்டு வருகிறது. ஒருநாள் அழகாய் நிற்போரின் வரிசையில் நாமும் நிற்க வேண்டும் என இப்பாடல் மூலம் அறைகூவல் விடுத்தார். எமில் ஜெபசிங் எழுதிய 130க்கும் மேற்பட்ட பாடல்கள் இந்திய திருச்சபையை இன்றும் உலுப்பிக் கொண்டு வருகிறது. இவரது பாடல்களைக் கேட்டு, இந்திய கிராமங்களுக்குள் சுவிசேஷ பணியை செய்ய அர்ப்பணித்து சென்றோர் ஏராளம்! ஏராளம்!!

---

**மன்னா செல்வகுமார்**

பாணாங்குளம் நாகர்கோவில் மெயின் ரோட்டில் பாளையங்கோட்டையிலிருந்து 8 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள பிரதான சாலையிலிருந்து மேற்கே இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஊர். பாணன் என்றால் பாடும் குலத்தான் என்று பொருள் பாண் என்றால் பாட்டு என்ற பொருள் உண்டு. எனவே இங்கு வாழ்ந்த மக்கள் சிறந்த பாடகர்களாக இருந்துள்ளார்கள். கவி பாடும் திறம் படைத்தவர்களாகவும் வாழ்ந்துள்ளார்கள். இதே நாகர்கோவில் ரோட்டில் வள்ளியூரை அடுத்து பணகுடி என்ற ஒரு ஊர் உள்ளது. இவ்வூரில் பணகுடி மக்கள் பாடும் இசைக்கருவிகள் செய்துள்ளார்கள். பண்பட்டவர்கள் பண்ணோடு பாடுவதில் ஆர்மோனியம், 150 ஆண்டுகளுக்கு முன்பு இவ்வூரில் தான் ஆர்கன் போன்ற இசை கருவிகள் அதிகமாக தயாரித்தார்களாம். அவைகளை மீட்டி பரம்பரையாய் வாழ்ந்து வந்த ஊர்கள் தான் பணகுடி, பாணாங்கும் பணகுடி , பாணான்குளம் ஆகிய ஊர் மக்கள் பண் பாடுவதில் வல்லவர்கள் என்பதற்கு ஆதாரங்கள் உண்டு.





# அகண்ட பாரதம் உண்மையா?

சாமுவேல் ஆபிரகாம் . D

கிறிஸ்தவ வாசக அன்பர்களை குறிப்பாக இளம் தலைமுறையினரை கற்பனை என்னும் குதிரையில் பயணம் செய்து கடந்த நூற்றாண்டின் முன் பகுதிக்கு அழைத்துச் செல்ல அவாவுகின்றேன். நமது இந்தியாவின் அரசியலில் கடந்த நூற்றாண்டு மிக முக்கிய மைல் கல் ஆகும். ஏனெனில் அது ஓர் அரசியல் மாற்றம்; மிகப்பெரிய அரசியல் மாற்றம் ஏற்பட்ட காலக்கட்டமாகும். அரசியல் மாற்றமே பொருளாதார, பண்பாட்டு, சமுதாய மாற்றத்திற்கு காரணமாகும். மக்களை சட்டத்தின் மூலமும் - சட்டத்தை நடைமுறைப் படுத்துவதன் மூலமும் சாதக பாதகமான மாற்றத்தை ஏற்படுத்தமுடியும்.

இந்திய துணை கண்டம் 1947 இல் எப்படி இருந்தது என்று நீங்கள் அறிந்தால் தான் இனி வரும் தொடரை நீங்கள் சரியாக புரிந்து கொள்ள முடியும். ஒவ்வொரு கிறிஸ்தவனும் நமது நாட்டு அரசியல் பின் புலத்தை நன்கு அறிந்து கொண்டால் மட்டுமே நமது உரிமைகளை புரிந்து கொள்ள முடியும்.

இந்தியா ஒருபோதும் 1947க்கு முன் ஒரே ஆட்சியின் கீழ் இருந்ததில்லை. இந்துத்வா நண்பர்கள் சொல்வது போல அகண்ட பாரதம் என்பது ஒரு மாயையே! அதாவது மேயாத மான்! சொல்லப்போனால் சுமார் 3000 சிதறுண்ட தனித்தனி நாடுகளை 1526 பின்னர் முகலாயர்கள் தங்களது வலிமையான பராக்கிரமத்தால் சிறுகச்சிறுக ஒன்று இணைத்தார்கள், நாட்டின் அதிகார மொழியாக சுமார் இரண்டு மூன்று நூற்றாண்டுகளாக உருது அதிகாரப்பூர்வமான மொழி ஆயிற்று. ஒரே நாணயம், மொழி, தலைமை இந்தத் துணைக் கண்டத்தில் அப்போது தான் ஆரம்பித்தது. அதுவரை ஏராளமான சிறு சிறு குறு நில மன்னர்கள் தனித்தனி பண்பாடுகள், கலாச்சாரங்கள் இருந்தன.

இதைத்தொடர்ந்து பிரிட்டிஷ்காரர்கள் துணைக் கண்டத்தை தங்களது ஆட்சியால் சுமார் இரண்டு நூற்றாண்டுகள் ஒன்றிணைத்தார்கள். பிரிட்டிஷ் நாணயம், ஆங்கில மொழி, சட்டம், வரி வசூல் முறை, போக்குவரத்து முதன்முறையாக இந்தியாவில் புகை வண்டிகள் ஏற்பட்டு சிதறுண்ட நாடுகள் இணைக்கப்பட்டன. பெருமளவில் வெளிநாட்டு வாணிபங்கள். ஏற்படுத்தப்பட்டன.

ஏராளமான, வித்தியாசமான கலாச்சாரம் கொண்ட மக்கள் துணைக்கண்டத்தில் வசித்தனர். 1947 இல் இரண்டு வகை ஆட்சியை கொண்டிருந்தது தற்போதைய இந்தியா. ஒன்று ஆங்கிலேயரின் நேரடி ஆட்சிப் பகுதிகள் மற்றும் ஆங்கிலேயரின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டு, தனியாக சுதந்திரமாக ஆட்சி செய்த அரசுகள் சமஸ்தானங்கள்.

1947இல் சுமார் 565 தனித்தனி நாடுகள்! தற்போதைய இந்தியாவுக்குள் இருந்ததென்றால், அதற்கு முன்பு எப்படி இருந்திருக்கும் என்று கற்பனை செய்யுங்கள்! இந்துக்கள் முகலாயர்கள், கிறிஸ்தவர்கள், ஜெய்ன மதத்தவர்கள், பௌத்தர்கள், பாரசீகர்கள் என பல மதத்தவர்களும்- பிராமணர், வைசியர், சத்திரியர், சூத்திரர் ஆரியர்களால் ஒரே மதத்திற்குள் பல பிரிவுகளும் இருந்தன. பிறவியால் உயர்வு; தாழ்வு; இல்லை. 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற வள்ளுவம் எடுபடவில்லை. 1947 ஆம் ஆண்டு கணக்குப்படி 565 சமஸ்தானங்கள் இந்தியாவில் இருந்தன!' அன்றைய இந்தியாவில் 28% மக்கள் சமஸ்தானங்களுக்குள் வசித்தனர்.

இந்திய ஒருமைப்பாடு மற்றும் சுதந்திர எழுச்சியை தடுக்கவே இந்த இரண்டு வகை அரசியல் முறைகளும் கையாளப்பட்டன,' அதாவது பிரிட்டிஷ் ஆளும் பகுதியில் உள்ள இந்திய மக்கள் சுதந்திர எழுச்சியில் ஈடுபடும்போதெல்லாம் ஆங்கிலேயருக்கு உதவ மாற்றாக மன்னர்கள் சமஸ்தானங்கள் தேவைப்பட்டனர்!. அதுசரி! அப்போதிருந்த இந்தியாவை இரண்டாக துண்டாட காரணமானவர்கள் யார்?

ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான், பங்களாதேஷ், மியான்மர், மலேசியா, சிங்கப்பூர் அனைத்தும் அடங்கிய அகண்ட பாரதம் எப்படி கனவானது?

பெரும்பான்மையானவர்கள் ஆளும் நாட்டில் சிறுபான்மையினரின் உரிமை என்ன? இந்நாட்டில் சிறுபான்மையினரின் உரிமை என்றால் பெரும்பான்மையினரால் வழங்கப்படுவதா? அல்லது இயற்கையாகவே பிறப்பு உரிமையா?

-அடுத்த இதழ்களில்

# கிறிஸ்தவ கீர்த்தனைக் கவிஞர்கள்

## நெல்லை

மன்னா செல்வகுமார்

### காபிரியேல் உபதேசியார்

திருநெல்வேலி மாவட்டத்தில் பார்வதியாபுரத்தில் 1820-ஆம் ஆண்டுகாபிரியேல் உபதேசியார் பிறந்தார். உபதேசியாராகப் பணியாற்றிய இவர் தமிழ்,ஆங்கிலம், சமஸ்கிருதம், கிரேக்கம், இலத்தீன் ஆகிய மொழிகளைக் கற்றிருந்தார். இறையியலிலும் ஆழமான புலமையுடன் விளங்கினார். 'முன்ஷியார்' என்னும் சிறப்புப் பட்டம் பெற்றிருந்தார்.

இவர் பாளையங்கோட்டை சாராள் தக்கர் கல்லூரியில் தமிழ்ப் பணியாற்றினார். மிஷனெரிமார்களுக்குத் தமிழ்க் கற்பிக்கும் பணியையும் சிறப்பாகச் செய்தார். 'அக்கினி மூழ்கிய மூவர்', 'ஞானகீதம்' என்னும் இரண்டு நூல்களை இவர் எழுதியுள்ளார்.

காபிரியேல் உபதேசியாரின் கீர்த்தனைகள் இசைநயமும், கருத்தோட்டமும் உடையவையாகத் திகழ்கின்றன. தகுந்த இராகத்தில் பாடுவதற்கேற்ற தாளமுறைகளையும் உள்ளடக்கியுள்ளன.

'நீத முதற் பொருளாய் நின்றருள் சருவேசன்
நிதமும் பணிந்தவர்கள் இருதயமலர் வாசன்
நிறைந்த சத்திய ஞான மனோகர,
உறைந்த நித்திய வேத குணாகர,
நீடு வாரி திரை சூழ மேதினியை
மூடு பாவ இருள் ஓடவே அருள்செய்' (11)

சொற்களஞ்சிய அறிவாற்றல் இவரிடம் உள்ளது என்பதை இப்பாடல் நிரூபிக்கின்றது.

இறைபண்புகளை விரித்துக் கூறுகையில்,

'எங்கணும் நிறைந்த நாதர் - பரிசுத்தர்கள்
என்றென்றைக்கும் பணிபாதர்
துங்கமாமறைப் பிரபோதர் - கடைசி நடு
சோதனைசெய் அதி நீதர்
பங்கில்லான், தாபம் இல்லான், பகர் அடி முடிவில்லான்
பன் ஞானம், சம்பூரணம், பரிசுத்தம் நீதி என்னும்' (11:1)
என்கிறார்.

'என்ன பாக்கியம் எவர்க்குண்டிந்தச் சிலாக்கியம்?' (98:பல்லவி) என்ற பாடலைத் தம் தியானத்தில் இறைவனைக் கண்ட மகிழ்ச்சியால் பாடியது என அவரது பேரன் கூறியுள்ளார். இவ்வாறு இறைவனில் மகிழ்ந்திருந்த கவிஞர் 1885 ஆம் ஆண்டில் காலரா நோயினால் மரணமடைந்தார்.

### தேவசகாயம் உபாத்தியார்

1830-ஆம் ஆண்டு சிவகாசியை அடுத்த சாட்சியாபுரத்தில் தேவசாகயம் பிறந்தார். பள்ளியில் பயிலும் போதும், ஆசிரியராகப் பணியாற்றும் காலங்களிலும் கிறித்தவர்களைக் கேலி செய்தவர். ஆயினும், ஆண்டவரின் அருள்பெற்று கிறித்தவராக மாறினார். கிறித்துவுக்குத் தொண்டாற்றி, 1882-1890 வரை இறைப்பணி புரிந்தார்.

தேவசகாயம் அவர்கள் பல கீர்த்தனைகளையும் இயற்றியுள்ளார். அவற்றுள் நான்கு கீர்த்தனைகள் கிறிஸ்தவப் பாமாலையில் உள்ளன. ஆண்டவரைஅண்டிச் சேரும் அடியவரின் அன்புள்ளத்தை எடுத்துக் காட்டுவதாக 'அடைக்கலம் அடைக்கலமே யேசு நாதா' என்னும் பாடல் அமைந்துள்ளது.

'சிந்திய உதிரமதும் ஐந்து திருக்காயமும்
நொந்துரு கெனதுமனச் சஞ்சல மகற்றிடும்
பந்தமிகும் பாவி என்றன் கெஞ்சிடுங் கரத்தினை
எந்தவிதமும் தள்ளாமல் இரங்கிடு மையனே!' (373:3)

என்ற அடிகளில் அவர் இறைவனை நோக்கி கெஞ்சி மன்றாடும் நிலை, அடைக்கலம் கேட்கும் காட்சி, இறைவனிடம் அபயக்குரல் எழுப்பும் நிலை ஆகியவற்றைக் காண முடிகின்றது. இவ்வாறு இறைவனிடம் வேண்டிய அவர், இறைவனே பாவிகளை நோக்கி வருந்தி அழைப்பதாகவும் சித்தரித்துள்ளார்.

'கொடிய பாவத் தழலில் விழுந்து
குன்றிப் போனாயோ?
ஒடுங்கி வருந்தும் பாவிகள் தஞ்சம் நான்
ஒன்றுக்கும் அஞ்சாதே வா' (226:3)

இறைவன் பாவிகளை நேசிப்பவர் என்னும் கருத்து இதில் புலனாகின்றது. ஒருமுறை, தேவசாயம் உபாத்தியாயரின் பிள்ளைகளான தேவநேசன், தேவதாசன் இருவரும் ஒரேப் பொருளுக்காகச் சண்டை இட்டனர். ஒரே பொருளை இருவரும் உன்னுடையது அல்ல, என்னுடையது என உரிமைக் கொண்டாடினதால் சண்டை மேலோங்கியது. தேவசகாயம் தடுத்து அவர்களுக்கு அறிவுரைக் கூறி அனுப்பினார். பின் அதனைக் குறித்த சிந்தனையில் மூழ்கினார். அப்போது இவ்வுலகில் எதுவும் யாருக்கு சொந்தமானது அல்ல என்பதை உணர்ந்தார். உடனே

'நீயுனக்குச் சொந்தமல்லவே மீட்கப்பட்ட பாவி
நீயுனக்குச் சொந்தமல்லவே' (240:பல்லவி)

என்றக் கீர்த்தனையை இயற்றினார். இதில் மீட்கப்பட்ட பாவி என்றிருக்கும் இடத்தில் அவர் தாசா, நேசா என இயற்றினார்' என குறிப்புகள் கூறுகின்றன. இப்பாடல், கிறித்துவைத் தவிர நமக்கு சொந்தமானது எதுவும் இல்லை. ஆகவே அவரை மட்டும் பற்றிக் கொள் எனப் பாடியுள்ளார். இத்தகைய கவிஞர் தம் 70-ஆம் வயதில் 1900-ஆம் ஆண்டு காலமானார்.

# திருப்பாடலில் காற்றுக் கருவிகள்

இறைவனின் படைப்பாம் இயற்கையில் உறைந்திருக்கும் ஒளியும் ஒலியும் மனிதனைக் கவர்ந்து அதைப் போன்றே செயற்கையில் செய்வது மனிதனின் இயல்பாகும். ஒளியின் மூலம் கண்டதை இறைவனாக பாவித்தான். ஒலியின் மூலம் கேட்டதை இறைவனுக்கு இசைக்கருவிகள் உருவாக்கி காணிக்கையாக்கினான். திருவிவிலியமும் துவக்கம் முதல் இறுதி வரை இசையின் பயன்பாட்டைப் பதிவிட்டுள்ளது. திருவிவிலியத்தில் யூபால் என்பவர் யாழ் மீட்டுவோர் மற்றும் குழல் ஊதுவோர் ஆகியோர் அனைவரின் தந்தை என்று தொடக்க நூல் 4:21ல் குறிப்பிடப்பட்டுள்ளது... திருவிவிலியம் எபிரேய இசையின் பிண்ணணியைக் கொண்டுள்ளது.

இசைக் கருவியின் தோற்றத்தில் முதன்மையானது குழல் கருவி. காடுகளில் பலத்த காற்று வீசும் போது ஓர் இனிய ஒலி எழுந்ததை முல்லை நிலத்து ஆதி மனிதன் கேட்டான். அவ்வொலி எங்கிருந்து வருகின்றது என்பதை ஆராய முனைந்தவன், இறுதியில் மூங்கிலின் துளைகள் வழியாக ஒலியெழுகிறது என்பதை அறிந்தான். பின்னர் மூங்கிலைக் கொணர்ந்து, அதை பழுக்க காய்ச்சிய கோலால் துளை செய்து வேய்ங்குழல் உண்டாக்கினான் தமிழன், என பல்வேறு தமிழிசை நூல்கள் காற்றுக் கருவிகளின் தோற்றத்தை விவரிக்கின்றன. திருவிவிலியத்தில் அதிக இசைக்கருவிகள் திருப்பாடலில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இவ்வாய்வுக் கட்டுரையில் குறிப்பிட்டு திருப்பாடல்களில் காணப்படும் காற்றுக் கருவிகளையும் நம் பாரம்பரிய தமிழிசைக் கருவிகளையும் ஒப்புமைக் காண்போம்.

| தமிழ்ப் பதம் | ஆங்கிலப் பதம் | எபிரேயப் பதம் | திருப்பாடல் எண் |
|---|---|---|---|
| எக்காளம் | Trumpet | Shofar | 47:5; 81:3;150:3 |
| கொம்பு | Cornet | Khatsotsrah | 98:6 |
| எக்காளம் | High Sounding Trumpets | Shofar | 98:6 |
| குழல் | Organ Player of Instruments | Uggab Chalal | 150:4<br>87:7 |

**1. ஷோபார்:**

Shofar என்பது வெள்ளாடு அல்லது செம்மறி ஆட்டின் கொம்பால் செய்யப்பட்டது, இஸ்ரயேலின் தந்தையான ஆபிரகாம் தன் மகன் ஈசாக்கைக் கர்த்தரின் வார்த்தைக்குக் கீழ்படிந்து பலியிட முற்படும்போது, கர்த்தரின் தூதர் அதைத் தடுத்து நிறுத்துகின்றார். அருகிலிருந்த முட்செடியில் மாட்டிக்கொண்டிருந்த ஓர் ஆட்டுக்குட்டியைத் தன் மகனுக்குப் பதிலாகப் பலியிட்டார்.






இந்நிகழ்வை நினைவு கூறும் வண்ணமாய் இன்றும் யூதர்கள், இஸ்ரவேலர்களால் இக்கருவி புது ஆண்டின் இறைவழிபாட்டில் வாசிக்கப்படுகின்றது. தமிழர்கள் கோயில்களில் பயன்படுத்தும் குழல் கருவிகளும் எபிரேய குழல் கருவிகளின் தோற்றமும் ஒரே விதமாய் காணப்படுகின்றன.

**2. கட்சோட்ஸ்ரா** - KHATSOTSRAHI CHATZOZERAH.





ஆங்கிலத்தில் Trumpet என்றும், எக்காளம் என்று தமிழிலும், பொதுவாகக் குறிப்பிடப்பட்டாலும் எபிரேய மொழியில் Keren, Shophar, Chatzozerah, என்று மூன்று வகை கருவிகளாய் பகுக்கப்பட்டு குறிப்பிடப்பட்டுள்ளது. இவற்றில் லுளஷௌஜ என்ற கருவி Shophar கருவியைப் போன்று வளைந்து திருகலோடுள்ள 'கொம்பு வகை இசைக்கருவியாகும். Chatzozerah என்பது 2அடி நீளம் கொண்ட எக்காளம். நாதஸ்வரத்தின் வடிவைக் கொண்டுள்ள இக்கருவி சில வெள்ளியால் செய்யப்பட்டிருக்கும். இவை இரண்டு வகைப்படும்

1. HATSOTSERAS என்பது நேர் எக்காளம்
2. CHATZOZERAH என்பது வெள்ளி எக்காளம்












நேர் எக்காளம் போன்ற அதே வடிவினைக் கொண்ட தமிழர் இசைக் கருவி நெடுந்தாரை என்று அழைக்கப்படுகின்றது.

**நேர் எக்காளம்:**

- இந்த வகை எக்காளம் 2 அடி நீளம் கொண்டது.
- சில எக்காளங்கள் வெள்ளியால் செய்யப்பட்டிருக்கும்
- எக்காளங்கள் வரையறுக்கப்பட்ட சந்தத்தோடு இசைக்கப்படுகின்றன.

**3.உகாப்**

காற்றிசை கருவியான உகாப் ஒரு குழல் அல்லது பல குழல்கள் இணைந்த குழல்களாகும். எகிப்திய நினைவுச் சின்னங்களில் காணப்படும் இரு குழல்கள், புல்லாங்குழலில் காணப்படும் துளைகளைக் கொண்டுள்ளது.



421. [Ancient Egyptian trumpets.]



470. [1, 2, 3, 4. Ancient horns and curved trumpets; 5. straight trumpet; 6. pipe.]



கலீல் அல்லது ஹலீல் என்று அழைக்கப்படும் மற்றொரு எபிரேய குழல்




கலீல் அல்லது ஹலீல் உருவத்தை ஒத்த தமிழர்களின் திருச்சின்னம் என்று அழைக்கப்படும் கருவி.

தொகுப்பு: இரா.கிருபாவதி

---

# கீர்த்தனைகளின் தோற்றம் மற்றும் வளர்ச்சி

கீர்த்தி என்னும் அடிப்படை சொல்லில் இருந்து உருவானதே கீர்த்தனை என்னும் சொல். கீர்த்தனை என்பதற்கு புகழ் என்பது பொருள், அதாவது ஒருவரின் புகழை பாடுதல் அல்லது பெருமை பாடுதல் என்று பொருளின் அடிப்படையில் தோன்றியதே கீர்த்தனை.

தொல் காலம் முதற்கொண்டு இந்த புகழ் பாடும் வழக்கம் இருந்துள்ளது. சங்க காலம் சங்கம் மருவிய காலத்தில் வழக்கில் இருந்த இசைப்பாடல் தேம்பாவணி என்று அழைக்கப்பட்டது. இது முகனிலை, கொச்சகம், முரி என்று முன்று பகுதிகளை கொண்டுள்ளது. அதுவே நாம் இப்பொது பல்லவி, அனுபல்லவி, சரணம் என்று கீர்த்தனைகளின் உறுப்புகளாக பரினாமித்துள்ளது. என்பது அறிஞர்களின் கருத்து. பல பிற மதத்தவரின் இலக்கிய இசைகளில் காலம் காலமாக கீதம் என்னும் வாக்கியம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

கீர்த்தனைகள் என்பதின் ஆழமான அர்த்தங்களை நாம் புரிந்து கொண்டால் நாம் தற்போது படிக்கும் கீர்த்தனை பாடல்களின் மகத்துவங்களை அறிந்து கொள்ளலாம். கீர்த்தனைகள் என்பன இசை தாளத்துடன் பாடக்கூடிய பாடல்களாகும். கீர்த்தனைகள் சமுதாய மாற்றத்திற்கு வழிவகுக்கும் ஓர் உணர்வு மிக்க பாடல்களாகும். கீர்த்தனைகள் பெரும்பாலும் முதலானவனை போற்றியே பாடக்கூடியதாக இருந்துள்ளது. உணர்ச்சி மிக்க அதே நேரத்தில் மகிழ்ச்சி களிப்புடன் கீர்த்தனைகள் பாடகூடியன.

இறைவனை வழிபடுவதில் ஒரு முக்கிய பங்கு வகிக்கும் ஒரு முறை இசை மீட்டி இறைவனை தொழுதல் ஆகும். இந்நிலையில் நாதபிரம்மனாக, நாதசொருபியாக விளங்கும் இறைவனை நாதம் அதாவது இசை மூலம் துதித்து பாடும் தமிழக பக்தி பாடல் சாயல்லில் உருவானதே கீர்த்தனை பாடல்கள். தமிழ் மண்ணில் பிறந்து, தமிழ் சமயங்களில் நம்பிக்கை கொண்டு, தேவார இசைப்பாடல்களை இசையுடன் சேர்ந்து படித்து, பிறசமய இலக்கியங்களில் உள்ளத்தை பறிகொடுத்து பின் கிறிஸ்தவர்களாகிய தமிழ் நாட்டு கிறிஸ்தவர்களில் பலருக்கு திருச்சபைகளில் மேலைநாட்டு இசையில், மேலை நாட்டு பண்பாட்டில் பிறந்த பாடல்களை தமிழில் மொழிபெயர்ப்பு செய்து பாடுவது மன நிறைவை தரவில்லை. இப்பெரிய குறைபாட்டினை நிவிர்த்தி செய்யக்கூடிய வகையில் திருமறைச்செய்திகளை உள்ளடக்கிய தமிழிலக்கியங்களையும், தமிழிசைப்பாடல்களையும், தமிழ் நாட்டுச் சூழலில் படைத்தளிக்க தமிழ்நாட்டினை சார்ந்த கிறிஸ்தவ புலவர்கள் பலர் அரும்பாடுபட்டனர்.

அவ்வாறு உருவாகியதே கிறிஸ்தவ கீர்த்தனைகள்.

சுஜித் ரெக்ஸ்

# தென்தமிழக தேவாலயங்களின் இசை பணியில் பாடகர் குழுவின் பங்கு

# –ஓர் வரலாற்றுப் பார்வை

தென்தமிழகத்தில் SPG, CMS, LMS, ஆகிய மிஷினரி இயக்கங்களைச் சார்ந்த மிஷனரிமார்கள் ஆண்டவராகிய ஏசு கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவித்து தேவாலயங்களையும் பள்ளிக்கூடங்களையும் மருத்துவமனைகளையும் கட்டி எழுப்பினார்கள். தேவாலயங்களில் பாடல்களுக்கு முக்கியத்துவம் கொடுத்தார்கள். தொடக்க காலத்தில் மிஷனரிமார்கள் தங்களது தாய் மொழியான ஜெர்மன் மற்றும் ஆங்கில மொழி பாடல்களை தமிழில் மொழிபெயர்த்து தேவாலயங்களில் இசையுடன் பாட கற்றுக்கொடுத்தார்கள். நெல்லையான் தஞ்சை வேதநாயகம் சாஸ்திரியார், நாகர்கோவில் மயிலாடி யோவான் பால்மர் என பல்வேறு கிறிஸ்தவ தமிழ் கவிஞர்கள் கீர்த்தனை பாடல்களை இயற்றி அதற்கு இசை என்னும் மெட்டமைத்து பாடக் கற்றுக் கொடுத்த பின்னர் தேவாலயங்களிலும் அந்த பாடல்கள் சபைமக்களால் சிறப்பாக பாடப்பட்டன.

**பாடகர் குழுக்கள்**

தொடக்க காலத்தில் SPG மிஷன் தலைமை இடங்களாக இருந்த நாசரேத் முதலூர் சாயர்புரம் தூத்துக்குடி தேவாலயங்களிலும் CMS மிஷன் தலைமை இடங்களாக இருந்த பாளையங்கோட்டை, மெய்ஞ்ஞானபுரம், நல்லூர், சுரண்டை, டோனாவூர், பண்ணைவிளை, போன்ற இடங்களிலும், LMS மிஷன் தலைமை இடங்களாக இருந்த மயிலாடி, நாகர்கோவில், நெய்யூர் ஆகிய இடங்களிலும் தொடங்கப்பட்டது. பின்னர் அனைத்து மிஷன்களிலும் படிப்படியாக சர்க்கிள் தலைமை இடங்கள், சேகர தலைமை இடங்கள் ஆகியவற்றில் பாடகர் குழு தொடங்கப்பட்டது.

**பாடகர் குழுவும் அங்கி அணிதலும்**

தொடக்க கால முதலே SPG மிஷன் தலைமை இடங்களில் தொடங்கப்பட்ட பாடகர் குழுவில் பாடகர்கள் வெண்ணங்கி, அதன் மேல் சர்ப்ளிஸ் எனும் மேலங்கி அணியும் பழக்கம் இருந்தது. ஆனால் CMS மற்றும் LMS மிஷன் தலைமை இடங்களில் தொடங்கப்பட்ட பாடகர் குழுவில் பாடகர்கள் வெண்ணங்கி அணியும் வழக்கம் அக்காலத்தில் இல்லை.

**S.P.G. மிஷன் ஊழியம் செய்த இடங்களில் பாடகர் குழு - நாசரேத்**



SPG மிஷன் தலைமை இடங்களில் முக்கியமான ஒன்றாக இருந்த நாசரேத்தில் கனம்.ஸ்ட்ராஹன் பணி செய்த காலங்களிலே (1870-1876) இங்கிலாந்திலிருந்து ஆர்கன் கொண்டுவரப்பட்டது. ஆர்கன் இசையுடன் பாடகர்குழு தொடங்கப்பட்டது. நாசரேத்தின் தந்தை கனம். ஆர்தர் மார்காஷிஸ் ஐயரவர்கள் காலத்தில் (1876-1908) பாடகர் குழு தொடர்ந்து வளர்ச்சி பாதையில் சென்றது. இக்காலத்தில் அருள்திரு.இ.ஜோசப் ஐயரவர்களும் அருள்திரு. பி. ஜான் ஐயரவர்களும் குருத்துவ பணியோடு நாசரேத் தேவாலயத்தில் இசை பணியையும் சிறப்பாக செய்துவந்தனர். இவ்விருவரும் ஆர்கனிஸ்டுகளாகவும் சிறப்போடு நாசரேத் தேவாலயத்தில் பணியாற்றினர். இவ்விருவரின் பெரும் முயற்சியால் நாசரேத் தேவாலயத்தில் பாடகர் குழு தொடங்கப்பட்டது. இவ்விருவருக்குப் பின்னர் 1920 வரை சபை ஊழியரான சால்ஜோசப் உபதேசியார் ஆர்கனிஸ்டாக பணிபுரிந்தார். அக்காலத்தில் பாடகர் குழு தலைவர் ஆகவும் ஆர்கனிஸ்ட்களே செயல்பட்டு வந்துள்ளனர். அவர்களுக்கு பின் சபை ஊழியரான திரு மோசஸ் உபதேசியார் ஆர்கனிஸ்டாக பணி செய்தார். அவருக்குப் பின் 1938 வரை திரு செல்லையா ஆசிரியர் ஆர்கனிஸ்டாக பணி செய்து வந்தார். 1937 வரையிலும் திரு. சுந்தரம் உபதேசியார் அவர்களின் குமாரர் திரு.சு.கோயில்பிச்சை ஆசிரியர் பாடகர் குழு தலைவர் ஆக சிறப்பாக பணி செய்தார். திரு.சா.தங்கராஜ் அவர்கள் ஒரு ஆண்டும் திரு.டி.அசரியா லாசரஸ் ஓரிரு ஆண்டுகளும் 1940 வரை ஆர்கனிஸ்டுகளாகப் பணி செய்தனர். 1940 - 1970 வரையிலான காலம் நாசரேத் பாடகர்குழுவின் பொற்காலம் என அழைக்கப்படுகிறது.

1940 - 1970 வரையிலான இக்காலத்தில் நாசரேத் தேவாலயத்தில் திரு.ஜோயல் இஸ்ரவேல் ஆசிரியர் அவர்கள் ஆர்கனிஸ்டாக & பாடகர் குழுவின் தலைவர் ஆக சிறப்பாக செயல்பட்டு வந்தார்கள், இவர்களிடம் ஆர்கன் இசைக் கற்றவர்கள் உலகமெங்கும் ஆர்கனிஸ்டாக, பாடகர் குழுவின் தலைவராக சிறப்பாக செயல்பட்டு வருகிறார்கள் என்பது ஒரு சிறப்புக்குரிய செய்தியாகும். மார்கன் இசையுடன் பாடகர் குழுவின் பாடலுடன் சபையார் இசைந்து பாட விட்டால் இவர் ஆர்கன் இசையை நிறுத்திவிடுவார். நாசரேத் தேவாலய பாடகர் குழுவினர் (SPG) ஆங்கிலிக்கன் உயர் முறைப்படி ஆராதனையில் செயல்படுகின்றனர்.

**CMS மிஷன் தேவாலயங்களில் பாடகர் குழு - பாளையங்கோட்டை**

CMS மிஷனில் பாடகர்குழுவினர் அங்கி அணியும் முறை தொடக்கம் சி எம் எஸ் மிஷன் தேவாலயங்களில் பாடகர் குழுவினர் அங்கி அணியாமல் பாடல்களைப் பாடி ஆண்டவரை மகிமைப்படுத்தி வந்தனர். பாளையங்கோட்டை தூய. திரித்துவ பேராலயத்தில் திரு V.J.டேர் அவர்களால் பாடகர் குழு தொடங்கப்பட்டது திரு.V.J.டேர் அவர்களே, கொயர் மாஸ்டர் என்ற பாடகர் குழு தலைவராகவும் ஆர்கனிஸ்ட் ஆகவும் சிறப்பாக செயல்பட்டார்கள். இவர் அக்காலத்தின் சி. எம். எஸ் தலைமை மிஷனரி அருள்திரு E.S.கார் ஐயரவர்களிடம் (1887 - 1915) சிறப்பாக பாடகர் குழு நடத்தியமைக்காக புனித வேதாகமத்தை பரிசாகப் பெற்றார்கள். 08.02.1920 இல் பாளையங்கோட்டை தூய. திரித்துவ தேவாலயத்தில் குரு

அபிஷேக ஆராதனை நடத்தப்பட்டது. அந்த ஆராதனையின் போது பாளையங்கோட்டை தூய திரித்துவ தேவாலய பாடகர் குழுவினர் முதன்முதலாக அங்கிகளை அணிந்து ஆராதனையில் பாடல்களைப் பாடி ஆண்டவரை மகிமைப்படுத்தினர். பாடகர் குழுவினர் அங்கி அணிவதற்கு எதிர்ப்புகள் ஏற்பட்டது ஆனாலும் பேராயர் உவாலர் அவர்கள் உறுதியோடிருந்து எதிர்ப்பாளர்களை அமைதிப்படுத்தினார்கள். அந்நேரம் பாடகர் குழு தலைவராக இருந்தவர் திரு எம். டி. தாமஸ் அவர்கள் ஆவார். இவருக்குப் பின்னர் எஸ்.வி. நேசமணி, ஆபிரகாம் தாமஸ், வேதநாயகம், ஜான் தேவதாஸ், பாண்டியன், ஜோசியா தேவ இரக்கம் Dr.S.விக்டர் சாலமோன் மாசிலாமணி, அப்பாதுரை நல்லவேந்தன், ஜான் டி. தம்பான், சாமுவேல், குணசீலன், மார்காஷிஸ் அற்புதராஜ் ஆகியோர் பாளையங்கோட்டை தூய திரித்துவ பேராலய பாடகர் குழுவின் பாடகர் குழு தலைவராக சிறப்பாக செயல்பட்டு வந்துள்ளனர். பாளையங்கோட்டையைத் தொடர்ந்து பிற CMS மிஷன் தலைமை இடங்களிலும் பாடகர் குழுவினர் அங்கி அணியும் பழக்கத்தை கடைபிடித்தனர்.

LMS மிஷன் ஊழியம் செய்த இடங்களில் பாடகர் குழுவில் அங்கி அணியும் வழக்கம் கடைப்பிடிக்கப்படவில்லை.

**பாமாலை பாடல்கள் பாடும் முறை தொடக்கம்**

ஃபெப்ரிசியஸ் ஜெர்மன் மொழியிலிருந்து பாமாலை பாடல்களைத் தமிழில் மொழி பெயர்த்தார். அவரது மொழிபெயர்ப்பு பாடல்கள் பாடகர் குழு மூலமாக தென்தமிழகத்தில் நாசரேத் தேவாலயத்தில் பாடப்பட்டது. அவருக்கு பின்பாக கனம் ரேனியஸ் ஐயரவர்கள் ஜெர்மன் மற்றும் ஆங்கில மொழி பாமாலை பாடல்களை தமிழில் மொழிபெயர்த்து தேவாலயங்களில் கற்றுக்கொடுத்து பாட செய்தார்கள்.

CMS மிஷன் பணிசெய்த தேவாலயங்களில் இப்பாடல்கள் பாடப்பட்டன. ரேனியஸ் ஐயரவர்களுக்குப் பின்னர் பெற்றிட் ஐயர், போப் ஐயர் ஆகியோரும் இப்பணியைச் சிறப்புற செய்தனர் அவர்களுக்குப் பின்னர் பேராயர் கால்டுவெல் அவர்களும் சி. எம். எஸ். தலைமை மிஷனரி தாமஸ் உவாக்கர் ஐயரவர்களும் ஆங்கில மொழி பாமாலை பாடல்களை தமிழில் மொழிபெயர்த்து பாடகர் குழுவினருக்கு கற்றுக்கொடுத்து தேவாலயங்களில் பாட செய்தனர் இவ்வாறு பாமாலை பாடல்கள் ஆர்கன் இசையுடன் பாடகர் குழுவினரால் பாடப்பட்டது.

பாளையங்கோட்டை தூய திரித்துவ பேராலய பாடகர் குழு தலைவர் ஆக நீண்ட காலமாக பணி செய்த திரு.M.D.தாமஸ் அவர்கள் 79 பாமாலை பாடல்களை தமிழில் மொழிபெயர்த்தார். பாடகர் குழு மூலம் தேவாலயங்களில் இப்பாடல்கள் பாடப்பட்டன. இவர் பாமாலை அமைப்புக் குழு தலைவர் ஆக பதிப்பாசிரியர் ஆக பணியாற்றியவர் ஆவார்.

**கீர்த்தனை பாடல்கள் பாடும் முறை தொடக்கம்**

தென் தமிழக தேவாலயங்களில் கீர்த்தனை பாடல்களைப் பாடும் வழக்கம் முதன் முதலாக மேற்கு திருநெல்வேலி பகுதியில் சி.எம்.எஸ் மிஷனின் ஒரு தலைமை இடமாக இருந்த பங்களாச் சுரண்டையில் தொடங்கியது. 1861 இல் கனம். டிக்சன் ஐயரவர்கள் பங்களாச் சுரண்டை குருவானவராக பணி மாறுதல் பெற்று வந்தார்கள். அவர் பங்களாச் சுரண்டை CMS ஆண்கள் போர்டிங் பள்ளி மாணவர்கள் தமிழ் கீர்த்தனை கிறிஸ்தவ பாடல்களை இனிமையாகப் பாடுவதைக் கேட்டு அவர்களிடம் அப்பாடல்களின் ராகத்தையும் கற்று தமிழ் கீர்த்தனை பாடல்களை தேவாலய ஆராதனைகளில் பாட வேண்டும் என்பதை 02 .11 .1861 இல் தீர்மானமாக நிறைவேற்றி அன்றைய தினமே பங்களாச் சுரண்டை தேவாலயத்தில் தமிழ் கீர்த்தனை பாடல்களை பாடும் வழக்கத்தை தொடங்கினார். இந்த கீர்த்தனை பாடல் பாடும் வழக்கம் வெகுவிரைவில் சி.எம்.எஸ் சபைகள் அனைத்திலும் பரவியது பின்பு எஸ்.பி.ஜி சபைகளுக்கும் பரவியது.

J.ஜான் ஞானராஜ் கல்லிடைக்குறிச்சி

---

ஜான் பால்மருக்கு நாதஸ்வர இசையில் ஈடுபாடு மிகுதி. நாதஸ்வர இசையை பொது இடங்களில் கேட்பது அரிது. திருவனந்தபுரம் பத்மநாப சுவாமி கோவிலில் தினந்தோறும் அதிகாலையில் நாதஸ்வர இசை வாசிக்கப்படும். பிற மதத்தவர் கோவிலுக்குள் செல்ல முடியாது. அதற்குக் கடுமையான தண்டனை உண்டு. பால்மர் அதைப்பற்றி கவலைப்படாமல், ஒரு 'போர்வையால் தம்மை முழுவதும் மறைத்துக் கொண்டு' நாதஸ்வர இசையைக் கேட்கச் செல்வதுண்டு .

ஒரு நாள் அவர் கேட்டு மகிழ்ந்த இராகத்தில் எழுதப்பட்டதே இக்கீர்த்தனை. **'சுய அதிகாரா'**, **'சுந்தரக்குமாரா'** எனத் தொடங்கும் பாடல்கள் எழுதுவதற்கும் இது காரணமாக அமைந்தது.

மன்னா செல்வகுமார்

# இனிய இசைத் தமிழ்

'இசை உருவானது செந்தமிழே - முதல்
ஏழிசை கண்டதும் செந்தமிழே" - பாவலர் பாலசுந்தரம்.

இயற்றமிழைக் கேட்டும் வாசித்தும் கூட அதன் பொருளை உணர முடியாத ஒருவன் இசைத் தமிழைக் கேட்கும்போது அதன் பொருட் சுவையை முற்றிலும் உணர்வது நிச்சயம். இனிய தமிழ் மொழி, இசையோடு கலக்குமானால் கேட்போர் உள்ளம் பரவசமடையும் என்பதில் ஐயமில்லை. தமிழிசை இனியது என்பதையுணர்ந்து அதன் வளர்ச்சிக்குத் தம்மை முற்றிலும் அர்ப்பணித்தவர் 'ஆபிரகாம் பண்டிதர்' என்று கூறலாம்.

கர்நாடக சங்கீதம் சிறப்புற்றோங்கிய சோழ நாட்டிலுள்ள திருவாரூரில் அவதரித்த திரு. தியாகய்யரவர்கள் இறைவனைப்பற்றித் தினந்தோறும் புதிது புதிதான சாகித்யங்கள் செய்து, சகல சங்கீத லட்சணங்களோடும், ராக பாவத்தோடும், அர்த்த புஷ்டியோடும் கூடிய ஆயிரக்கணக்கான உருப்படிகளை அவர்கள் தாய்மொழியாகிய தெலுங்கிலே வெகு அழகாக யாவரும் கொண்டாடக் கூடிய விதத்தில் இயற்றியிருக்கிறார்கள். அங்ஙனமே தீக்ஷிதர், சியாமா சாஸ்திரிகள் முதலானோர் செய்த கீர்த்தனங்களும் வர்ணங்களும் தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் அமைந்திருக்கின்றன.

திரு. புரந்தரதாசர் 15ம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 16ம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் (1494 - 1564) வாழ்ந்தவர். இவர் ஸ்வராவளி, அலங்காரங்கள், கீதங்கள் முதலியவற்றைக் கன்னடத்திலும் சம்ஸ்கிருதத்திலும் இயற்றினார்.

**மாயாமாளவகௌளை ராகத்தில்**

சங்கீத வித்தையை ஆரம்பிப்பது என்ற சம்பிரதாயத்தை ஏற்படுத்தியது அவர்தான். பெரியோர்கள் இசையில் வல்ல இவருக்குக் 'கர்நாடக சங்கீத பிதாமஹர்' என்னும் பட்டத்தைச் சூட்டினார்கள். திரு. புரந்தரதாசர், குழந்தைகள் எளிதாகக் கற்கும் பொருட்டு பிலஹரி ராகத்தில் பிள்ளையார் கீதம், மகேஸ்வரகீதம், விஷ்ணு கீதம் போன்றவைகளைக் கன்னடத்தில் எழுதி வைத்துள்ளார்.

இங்ஙனம் தெலுங்கு, சமஸ்கிருதம், கன்னடம் ஆகிய மொழிகளில் அமைந்துள்ள கீர்த்தனங்களையும் பாடல்களையும் பொருள் தெரியாமல் பாடுவதினால், சங்கீதத்தில் அர்த்த பாவம் என்ற மேலான பாவத்தை விருத்தி செய்ய முடியாமல் இருப்பதைப் பண்டிதர் உணர்ந்தார். பொருளின்றி இனிய ஓசையை மட்டும் அந்நிய மொழிகளில் கேட்டு இன்புறுவதை விட, இசையின் இனிய ஓசையோடு பொருளுமறிந்து பக்திரசமான கீர்த்தனைகள் பாடப்படுமானால் கேட்பவர்கள் யாவரும் நற்பயனடைவார்கள் என்பதைப் பண்டிதர் உணர்ந்தார், எனவே தமிழில் பல பாடல்களை எழுதி அவற்றிற்கு இசையமைக்கும் பணியில் ஈடுபட எண்ணினார்.

இப்பணிக்கு ஆரம்பமாக அவர் 96 தமிழ்ப் பாடல்களை இயற்றினார். இவைகளில் கீதம், சுரஜதி, க்ருதி, ஜதிஸ்வரம், வர்ணம் முதலியவை அடங்கும். இதில் முதல் 41 உருப்படிகள், தஞ்சாவூர் சங்கீத வித்வான் ஸ்ரீ ஜெகன்னாத பட்டுகோசாமி அவர்களால் சொல்லிக் கொடுக்கப்பட்டும் பிழைபார்க்கப்பட்டும் உள்ளன. பின்னுள்ள 55 உருப்படிகள் தஞ்சாவூர் அரண்மனை சங்கீத வித்வான் வைணீகர் ஸ்ரீ வெங்கடாசல ஐயரவர்களால் வீணையில் சொல்லிக் கொடுக்கப்பட்டும், ஈரப்படுத்தி பிழை பார்க்கப்பட்டும் உள்ளன. இந்த 96 உருப்படிகளில் சுமார் 50 உருப்படிகள் தஞ்சாவூர் சங்கீத வித்துவான் சாமியாப்பிள்ளை அவர்களால் வாய்ப்பாட்டாகச் சொல்லிக் கொடுக்கப்பட்டுள்ளன. பண்டிதர் அவர்கள் இதைத் தவிர, சாகித்யமில்லாத சுரஜதிகளுக்கும், வர்ணங்களின் எத்துக்கடை சுரங்களுக்கும், பிற மொழிகளிலுள்ள சாகித்யங்களுக்கும் தமிழில் எளிதான நடையில் பாடல்கள் இயற்றியுள்ளார். இப்பாடல்கள் அடங்கிய நூல் "கருணாமிர்த சாகரத் திரட்டு" என்ற பெயரில் 1907ம் ஆண்டு அதாவது இன்றைக்கு 76 ஆண்டுகளுக்கு முன்பு வெளியாகியுள்ளது. இந்நூல் ஹோ அண்டு கம்பெனியாரின் "பிரிமியர்" என்ற அச்சுக் கூடத்தில் அக்காலத்தில் பதிப்பிக்கப் பட்டது.

**ஜெபராஜ்** I J

திருச்சி கோட்டை கிறிஸ்து நாதர்
ஆலயத்தில் உள்ள பைப் ஆர்கன்

## கிறிஸ்துவுக்குள் பிரியமான வரலாற்று சங்க உறுப்பினர்ளுக்கு..

துயர்துடைக்கும் நண்பனாம் இயேசுவின் நாமத்தில் வாழ்த்துக்கள்...

சகல ஜாதிகளுக்கும் சுவிசேஷம் முந்திப் பிரசங்கிக்கப்பட வேண்டும் (மாற்கு 13:10) என்ற இயேசு கிறிஸ்துவின் கட்டளைக்கிணங்க, நம் இந்திய மண்ணில் சுவிசேஷம் அறிவிக்க வந்த மிஷனரிகள், நம் மக்களின் அடிமைதனத்தையும், அறியாமையையும் கண்டு வேதனையுற்றனர். இயேசுவின் அன்பினால் நிறைந்த மிஷனரிகள் இந்திய மக்களின் வாழ்வை மாற்ற முடிவெடுத்தனர். மருத்துவமனைகள், கல்வி நிலையங்கள் ஏற்படுத்தி கிறிஸ்துவின் அன்பை பிரதிபலித்தனர். மட்டுமின்றி காலரா போன்ற கொடிய நோய்கள் வந்தபோதும், பஞ்சத்தாலும் பட்டினியாலும் மக்கள் மடிந்தபோதும் மக்களின் தேவைகளை நிறைவேற்றி கடவுளின் நாமத்தை உயர்த்தினர். ஆறுதலற்ற, உதவியற்ற நேரத்தில் இறைவன் 'சமய சகாயர்களாக' மிஷனரிகளை பயன்படுத்தினார். இப்பணியில் தங்கள் இன்னுயிரை கொடுத்தவர்களும் உண்டு.

கிறிஸ்துவின் நற்செய்தியை விதைத்த மிஷனரிகளால், விசுவாசத்தில் கட்டப்பட்ட நாம் வாழும் இக்காலத்தில் கொரோனா என்கிற பெருந்தொற்று உலகம் முழுவதையும் பாதித்துள்ளது. கிறிஸ்துவின் அன்பை தம் நற்செயல்கள் மூலம் காட்டிய மிஷனரிகளைப் போல நாமும் இக்கொடிய காலத்தில் நற்செயல்கள் மூலம் கிறிஸ்துவின் அன்பை காட்டுவோம்.

நம்முடைய கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் மிகப்பெரிய தரிசன திட்டமான **'சமய சகாயன் - துயர்துடைப்பு பணி'** யினை தூர தரிசனத்தோடு செயல்படுத்த இருக்கிறோம். ஆம், மிஷனரிகள் நமக்கு காட்டிய கிறிஸ்துவின் அன்பை நாமும் மற்றவர்களுக்கு நற்செயல்கள் மூலமாக வெளிப்படுத்த திட்டமிட்டுள்ளோம். இக்கொடிய காலத்தில் தமிழகம் முழுவதும் உள்ள மருத்துவர்கள், கிறிஸ்தவ தன்னார்வலர்களை ஒருங்கிணைத்து **'சமய சகாயன் (னாக) - துயர்துடைப்பு மிஷன்'** என்ற பெயரில் மக்கள் பணியாற்ற துரிதமாக செயல்பட்டுக் கொண்டிருக்கிறோம்.

வேதம் சொல்லுகிறது,

இலவசமாய்ப் பெற்றீர்கள் இலவசமாய்க் கொடுங்கள். (மத்தேயு 10:8)

பல மிஷனரி ஸ்தாபனங்கள், மிஷன் இயக்கங்கள், மிஷனரிகள் வசதி வாய்ப்புகள் இல்லாத காலத்திலேயே கிறிஸ்துவின் அன்பினால் உந்தப்பட்டு மகத்தான சாதனையை செய்ய முடிந்தது என்றால், உலகமே வியக்கும்படி டெக்னாலஜி வளர்ந்துவிட்ட இந்த காலத்தில் இயேசு கிறிஸ்துவின் அன்பினால் பெரிதான காரியங்களை நம்மால் செய்ய முடியும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

பேரிடர்காலங்களில்தமிழகம்முழுவதும்அனைத்துமாவட்ட மற்றும் தாலுகாவில் உள்ள கிறிஸ்தவ தன்னார்வலர்கள் மூலம் அனைத்து மக்களுக்கும் தேவையான உதவிகளை கிறிஸ்துவின் அன்பினால் அனைத்து வழிகளிலும் தமிழக அரசுடன் இணைந்து, சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு, செயல்படுத்தவும், கிறிஸ்துவின் அன்பினால் உதவிகளைச் செய்யவும் கிறிஸ்தவ இளைஞர்கள், திருச்சபை மக்கள், தன்னார்வலர்கள், தொழிலதிபர்கள், மருத்துவ நண்பர்கள் தன்னார்வலர்களாகவும் நன்கொடையாளர்களாகவும் ஆதரவு கொடுப்பீர் **'சமய சகாயனாக'**...

நாம் பெறும் நன்கொடைகளை தனியாக இணையதளம் உருவாக்கப்பட்டு அதில் அனைத்து தகவல்களும் தெரிவிக்கப்படும் என்பதை அன்புடன் தெரிவித்துக் கொள்கின்றோம். நன்கொடை செலுத்தும் பொழுது 'சமய சகாயன்' திட்டத்திற்கு என்று குறிப்பிட்டு பணம் செலுத்த அன்புடன் கேட்டுக் கொள்கின்றோம். இதன் மூலமாக அரசாங்கத்திற்கும் நன்கொடை அளித்தவர்களுக்கும் கணக்குக் கொடுக்க வசதியாக இருக்கும்.

**கரம் கொடுப்போம் - 'சமய சகாயனாக'**

**Please find account details**

Bank: Federal Bank
Name: Tinnevelly Christian Historical Society
A/c number: 17480200003684
IFSC Code: FDRL0001748

அன்புடன்

திருநெல்வேலி
கிறிஸ்தவ வரலாற்று சங்கம்

+91 90420 15221 <https://www.facebook.com/Samayasahayan/> samayasahayan@gmail.com

## Gpay (Google Pay) மூலமாக நன்கொடை அனுப்ப .....

நமது **'சமய சகாயன்'** - துயர்துடைப்பு பணி'க்கு கென்று G-pay (Google Pay) மூலமாக நன்கொடை அனுப்ப விரும்புகிறவர்கள், **91767 80001** என்கிற இந்த எண் மூலமாகவும் அனுப்பலாம்.
நீங்கள் நன்கொடை அனுப்பிய பின்பு, அதைக் குறித்த முழு விபரங்களை இதே எண்ணில் தொடர்பு கொண்டோ , அல்லது இதே எண்ணிற்கு WhatsApp மூலமாகவோ, அல்லது samayasahayan@gmail.com மூலமாகவோ எங்களுக்குத் தெரியப்படுத்தவும்.

# தந்தானைத் துதிப்போமே...



இந்துப் பின்னணியிலிருந்து இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட குடும்பத்தின் மூன்று சகோதரர்களும், தங்களை ஆண்டவரின் ஊழியத்திற்கு அர்ப்பணம் செய்து, ஆண்டவரின் ஊழியத்திற்கு அர்ப்பணம் செய்து, திருச்சபையைக் கட்டும் போதகர்களாக, முழுநேரப்பணியில் ஈடுபட்டார்கள் என்பது வியக்கத்தக்கதல்லவா? இப்படிப்பட்ட குடும்பத்தின் மூத்த சகோதரராக விளங்கியவரே வே. மாசிலாமணி ஐயராவார். அவரது இளைய தம்பி வே. சந்தியாகு ஐயரும், சிறந்த பாடலாசிரியர் மற்றும் இசை வல்லுனர் என்பதை நாம் அறிவோம்.

மாசிலாமணி ஐயர் திருப்புவனம் என்ற சிற்றூரின் போதகராகப் பணியாற்றிய நாட்களில், இந்தக் கும்மிப்பாடலை எழுதினார். ஆண்டவரின் புகழை அனைவரும் அறியும் வண்ணம், அவரைப் போற்றிப் பாட, திருச்சபையாகிய கன்னியரை அழைப்பதாக, இப்பாடலை மாசிலாமணி எழுதியிருக்கிறார். சிறந்த வயலின் வித்துவானாகிய மாசிலாமணி, தனது பாடல் மற்றும் இசைத் தாலந்துகளை, நற்செய்திப் பணிக்கென முழுவதுமாக அர்ப்பணித்துச் செயல்பட்டார்.

திருவண்ணாமலையின் வாரச் சந்தை நாட்களில், மாசிலாமணி தன் நண்பர்களுடன் அங்கு சென்று இசைக்கச்சேரி நடத்துவார். அப்போது அவரின் பாடலையும் இசையையும் கேட்க, சந்தைக்கு வந்த மக்கள் கூட்டமாகக் கூடுவார்கள். அவர்களுக்கு நற்செய்தியைப் பக்குவமாகப் பாடல்கள் வழியாக அவர் எடுத்துக்கூறி, ஆண்டவரின் அன்பால் அவர்களைக் கவர்ந்திடுவார்.

மாசிலாமணி எழுதிய 'ஆர் இவர் ஆராரோ' என்ற கிறிஸ்மஸ் பாடலும், 'வந்தனம் வந்தனமே', மற்றும் 'ஆனந்தமே ஜெயா ஜெயா' என்ற புத்தாண்டுப் பாடல்களும், கிறிஸ்தவ சமுதாயத்திற்கு பண்டிகைகளின் மகிழ்ச்சியைக் கூட்டித் தரும் பிரபலமான பாடல்களாக விளங்குகின்றன. கருத்துச் செறிவுடன் விளங்கும் இப்பாடல்கள், நூற்றாண்டு காலமாய் திருச்சபை மக்களனைவரும் விரும்பிப் பாடும் பாடல்களாகத் திகழ்கின்றன. இப்பாடல்கள் பிரபலமாவதற்கு, அவர் அமைத்த சிறந்த இசைப்பண்களும் காரணமாகும். இசையும் பாடலின் சொல்லடுக்கும், அருமையாக இணைந்து வருவதை, 'ஆனந்தமே ஜெயா ஜெயா,' என்ற பாடலைப் பாடி மகிழ்வோர் நன்கு அறிவர்.

சுஜித் ரெக்ஸ்

# தமிழ் நாட்டுக் கவிஞர்கள்

தமிழ்நாட்டுக் கவிஞர்களுள் வேதநாயக சாஸ்திரியார் தொடங்கி சுமார் நூறு கீர்த்தனைக் கவிஞர்கள் ஆயிரத்துக்கும் மேலாகக் கீர்த்தனைகள் படைத்துள்ளனர். இவற்றுள் பல, கால வெள்ளத்தால் அழிந்து விட்டன; பல நம்மால் மறக்கப்பட்டு விட்டன; பல இராகம் தெரியாமல் விடப்பட்டன; பல புதிய பதிப்புகள் வெளியிடப்படும்போது விடுபட்டன.

ஆரம்ப நிலையில் வேதநாயக சாஸ்திரியாரின் கீர்த்தனைகள் தனி நூலாக வெளியிடப்பட்ட சூழலில் அக்கீர்த்தனைகள் கிறிஸ்தவர்களால் வழிபாடுகளில் பாடப்பட்டு வந்தன. இக்கீர்த்தனைகளின் சிறப்பால் கவரப்பட்ட பலர் கீர்த்தனைகள் இயற்றத் தொடங்கினர். அவர்களுள் தேவவரம் முன்ஷியார், அருள்திரு. சற்குணம் வின்பிரெட், ஜான் பால்மர், காபிரியேல் உபதேசியார், அருமைநாயகம் சட்டம்பிள்ளை, எச்.ஏ. கிருஷ்ண பிள்ளை, தே. தேவசகாயம் உபாத்தியாயர், அருள்திரு. அ. வேதக்கண், அருள்திரு. சி. மாசிலாமணி, மரியான் உபதேசியார், அருள்திரு. பாக்கியநாதன் தாவீது, தீ. யோசேப்பு, சி. யோசேப்பு, அருள்திரு. ஞா. சாமுவேல், சி. அருமைநாயகம், திட்டூர் தேசிகர், அருள்திரு. வே. மாசிலாமணி, ஆபிரகாம் பண்டிதர், அருள்திரு. ம. வேதமாணிக்கம், அருள்திரு. ஜா.சே. வேதநாயகர், அருள்திரு. சி.பி. ஞானமணி, அருள்திரு. வே. சந்தியாகு, அருள்திரு. எஸ். பரமானந்தம், டாக்டர் சவரிராயன் ஏசுதாசன், பாகவதர் ம. வேதநாயக சாஸ்திரியார், தே.அ.ஞானாபரணம் பண்டிதர், சவரிமுத்து உபாத்தியாயர், அருள்திரு. ல. பொன்னுசாமி, சா. மோட்சக்கண், தேவநேயப் பாவாணர், டாக்டர் வீ.ப.கா. சுந்தரம், புன்னையடியூர் சு. யோசேப்பு உபதேசியார், சு.முத்துசாமி உபாத்தியாயர், அ.ஜ.பிச்சைமுத்து போன்றோரைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். சுருக்கம் கருதி ஏராளமான கீர்த்தனைக் கவிஞர்களின் பெயர்களை இங்குக் குறிப்பிட இயலவில்லை. சுமார் மூன்று நூற்றாண்டுகளாக இக்கீர்த்தனைக் கவிஞர்களால் எழுதப்பட்ட கீர்த்தனைகள் இன்றும் நம் வாழ்வில் இரண்டறக் கலந்தனவாக விளங்குகின்றன. ஆனால் கீர்த்தனைகளின் இராகங்களை மாற்றி நாம் விரும்புவது போலப் பாடுவது மிகவும் கண்டிக்கத்தக்கது.

இன்று சுமார் ஐந்நூறு கீர்த்தனைகள் பல்வேறு வழிபாட்டு நூல்களிலுமாக வழக்கிலுள்ளன. அவற்றுள்ளும் இருநூறு கீர்த்தனைளை மட்டுமே திரும்பத் திரும்பப் பாடி வருகின்றனர்.

கீர்த்தனைகளைப் பாடிய கவிஞர்கள் கிறிஸ்துவின் மீது கொண்ட பக்தியாலும் பற்றுறுதியாலும் பல்வேறு விதமான சூழல்களில் கீர்த்தனைகளைப் பாடியுள்ளனர்.

இக்கீர்த்தனைகள் இறைவனுடைய திருவார்த்தைகளின் அடிப்படையில் கடவுளின் உதவியால் இயற்றப்பட்டதால் இப்பாடல்கள் நமக்கு எக்காலத்திலும் ஆறுதலையும் மகிழ்ச்சியையும் அளிக்கின்றன. கீர்த்தனைகளின் சிறப்பம்சத்திற்கு மற்றுமொரு காரணம் இவை இறையியல் கருத்துகளை மிகவும் எளிமையாகத் தருகின்றன. வேதவாசிப்பு, ஜெபம் ஆகியவை நமக்கு எவ்வாறு ஆறுதலும் அமைதியும் தருகின்றனவோ அதைப்போன்று கீர்த்தனைகளைப் பாடுவதாலும், அவற்றின் மூலம் விண்ணப்பங்களை ஏறெடுப்பதாலும் ஆன்மீக அமைதியும் இறையுணர்வும் பெறமுடிகின்றது.

கிறிஸ்தவக் கீர்த்தனைகளைப் பக்தி உணர்வோடு பொருள் உணர்ந்து, இராகத்தை மாற்றாமல் பாடிப் பயன்பெறுவோமாக!

மன்னா செல்வகுமார்




# விவிலிய ஒளியில் சித்தர் பாடல்கள்

ஆசிரியர் திரு ஜே ரமேஷ்

தமிழிலக்கியப் பரப்பிலும் தமிழ்ச் சமய உலகிலும் தமக்கெனத் தனித்தொரு இடத்தைப் பெற்ற ஆன்மீகச் சிந்தனையாளர்களாகவும், சமயப் புரட்சியாளர்களாகவும் திகழ்பவர்கள் சித்தர்கள். இவர்களது தனி வாழ்வையும் இலக்கியப் படைப்புகளையும் பற்றிய ஆர்வமும் நம்பிக்கைகளும் கடந்த சில ஆண்டுகளாகவே தமிழ்நாட்டில் நாளும் வளர்ந்து பெருகி வருகிறது. இத்தகு ஆர்வலர்களுள் ஒரு சாரார், இச்சித்தர்கள் செய்த அற்புதச் செயல்களாகிய சித்திகள் - அவர்கள் முக்திப்பேறடைந்த சமாதிகள், அவை பற்றிய நம்பிக்கைகள், அவர்களது யோகம் - மருத்துவம் - இரசவாதம் தொடர்பான செய்திகள் ஆகியவற்றில் பேரார்வம் கொண்டு, அவை பற்றி அறிய முயல்கிறார்கள்.

மற்றொரு சாரார், இச்சித்தர்கள் தமிழ்ச் சமய உலகில் நிலவிய - நிலவி வருகிற பன்முக மூட நம்பிக்கைகள், தமிழ்ச் சமுதாயத்தை நாசப்படுத்தும் (மனுதரும சாஸ்திரத்தின் வெளிப்பாடான வருணாசிரம கொள்கையினால் விளைந்த) சாதீயப் பாகுபாடுகள், சமய உலகில் பல ஊழல்களுக்கும் சுரண்டல்களுக்கும் வழி வகுத்த உருவ வணக்கம், இன்னபிற சாத்திர சடங்குகள் இவற்றையெல்லாம் ஆவேசமாக அஞ்சா நெஞ்சுடன் எதிர்த்து நின்று, அதுவும் இத்தகு சமுதாயப் பாகுபாடுகளுக்கு நீரூற்றி எருவிட்டு நிதம் வளர்த்த வைதீகமதமும், பிராமணீயமம் தலைவிரித்தாடிய காலத்திலேயே புரட்சிப் போர் நிகழ்த்திய அவர்களது சீர்திருத்தச் சிந்தனைகளையும் அவற்றுக்கு அடித்தளம் அமைத்து, ஆதரவு நல்கி அருந்துணை செய்தோரையும், செய்தனவற்றையும் அறிந்திட விழையும் அறிவுத் தேடலில் தம்மை ஈடுபடுத்திக் கொள்கின்றனர். இந்த இரண்டாம் பிரிவினருக்கு இன்பம் பயக்கும் இனியதொரு கைந்நூலாகவே, இந்த "விவிலிய ஒளியில் சித்தர் பாடல்கள்" எனும் பெயரிய, புகழ்மிகு கிறித்தவ நற்செய்தித் திரைப்பட இயக்குநராகவும் கிறிஸ்து பெருமானின் அயர்வறியா அருட்தொண்டராகவும் திகழும் திரு. ஜே.ரமேஷ் அவர்களின் இந்நூல் வெளிவந்துள்ளது.

**பேராசிரியர்.மோ.மைக்கேல் பாரடே**




**புத்தகம் கிடைக்குமிடம்..**

*நற்சான்றோர் தலைமையாளர் பயிற்சி நிறுவனம்*
*பிரஜாபதி நிவாஸ், 31, 4வது தெரு,*
*மகரிஷி டீச்சர்ஸ் காலனி, வானகரம், சென்னை 600095*
*அலைபேசி:* 8667654016,9841053626

